**"CHILDREN'S DAY, INDIA:"—THE VICEROY MEMORIAL EDITION.**



*"Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is; but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it." But,*

*"Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TURE."




*அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்]* [God is Love: Knowledge is Power: *Aum*

ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.**

புத்தகம். 21.] 1913௵ ஜுலை௴, பிரமாதீச௵ ஆடி௴ [சஞ்சிகை. 4.

## NOTICE.

The Editor of the *Vivekachintamani* while thanking his contributors for their valuable contributions, would like to draw the attention of the public to the fact that in pursuance of the uniform policy of this journal, articles could be received only on the understanding that the entire copy right in the articles should be vested solely in the Editor. It would not have become necessary to mention this matter now but for the fact that literary pilfering is becoming more and more prevalent in the journalistic world; and the intentions of the contributors who have by their free gift of the manuscripts helped to further the objects of the Diffusion of Knowledge Agency which the Editor has been maintaining and working for the public good under great difficulties and trials for the past twenty-five years, are being sought to be frustrated by unscrupulous persons.

C. V. Swaminathaiyar, Editor, & Founder V. C.

Lalita Publishing Co., Sole Agents and Managers 19, Adam St, Mylapore, S.

S Subrahmaniem, Joint Hon. Secretary, Vivekachintamani Rev: Committee.

"To sell the mind for money is a greater sin than to sell the body."

1. அறிவைப்பரவச்செய்வதற்கான நம் விவேகசிந்தாமணிக்கு வியாச, விஷய தானம் செய்வோர் யாவரேயாயினும் உண்மையான அந்தர்த்தியானத்தோடு பூர்ணமதஸம்மதமாய் விஷபார்ப்பணஞ் செய்யல் வேண்டும். தானம் செய்தபின் தத்தாபஹாரம் செய்யக்கூடாது. தத்தாபஹாரசிந்தையினர்க்கு விவேகசிந்தாமணி சங்கப்பலகைபோலிடங்கொடாதொடுங்கும்.

2. உழைக்கும்வழி யுணராது பிழைக்கவழி தேடும் சில தப்பிலிகள் நம்மை மோசஞ்செய்யாதபடி விவேகசிந்தாமணியிலுள்ள சுதந்திரமெல்லாமெமக்கே உரிமையாமென்று சட்டப்படி ஆதிமுதற்கொண்டே ஸர்க்கார் கெஜட்டில் தாக்கல் செய்யப்பெற்றிருக்கிறது.

3. விவேகசிந்தாமணியில்வரும் விஷயங்களையாவது அவைசம்பந்தமான ஸாதன ஸம்யம விவேகவிளக்கப்பேர்களையாவது தர்மவிரோதமாயுபயோகித்துக் கர்மவிக்னம் செய்வோர் பிழைக்கவழிதெரியாப் புல்லியர்புகும் பாழ்நரகிற்புக்கார் கதியாவர்: அடாஅது செய்நவா பாடஅது படுவர்: இகபர மிரண்டிலுமிது ஸத்தியம் ஸத்தியம், பலிக்குமென்றே திருஞன் பழனியாண்டவன். வேலுமயிலுர்த்துணை. ஆண்டானடிமையாய் உழைக்க உடன்பட்டான் கைச்சாற்றிது. ஓம்

விவேக  சிந்தாமணி.

# The Parable of the Peacock.

## மயிலுபாக்யானம்.

"வேனுமயிலுந் துணை."

—:(※):—

MOTTO:-"Many unjust laws allow bold knaves to exist in high places and acquire great influence with which they dazzle the eyes of the people"—C. E. Smith. (Copy-book maxim)

" கானமயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானுமதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினாற்போலுமே
கல்லாதான் கற்ற கவி".

தர்மமென்பது கர்மத்தின் இயல்பு. ஆகாயத்தில் கல்லை விட்டெறிந்தால் அது கீழேதான் வந்து விழும். கல்லை விட்டெறிதல் கர்மம். அது கர்த்தாவின்றி நடக்காது. கல்லெறிபவன் கர்த்தா. கை அல்லது 'கவான்' துணைக் கருவி. கல் உபாதனம். இம்மூன்றும் கர்த்தா, கருவி, காரியம் எனப்படும். இம்மூன்றுஞ் சேராவிட்டால் கல்லெறிதலாகிய கர்மம் நடைபெறாது. கல்லெறிதலாகிய கர்மம் நடைபெறாவிடத்து எறிந்த கல் கீழே விழுதலாகிய தர்மத்துக்குப் பிரவிருத்தியில்லை.

ஆகையால் தர்மம் சாசுவதமாயுள்ளதாயினும் கர்மமின்றி தர்மம் இயங்காது.

கல்லை ஆகாசத்திலெறியும் கர்த்தா தன்னுடைய கையின் விசையாகிய சக்தியால், பூமியின் ஆகர்ஷண சக்தியாகிய சாசுவத தர்மத்தை மீறி நடக்கும்படி அந்தக் கல்லுக்குத் தன்னுடைய சக்தியை அளிக்கிறான். அளித்தாலும் அது சாசுவதமான சக்தியாகிய பூமியின் ஆகர்ஷண சக்தியை வெல்லும் தன்மையதல்ல. அஃதேபோல், இயற்கை விரோதமான அதாவது தர்மவிரோதமான கொள்கைகள் ஜனசமூகத்தில் ஏற்படுமானால், அதன் வலியால், மற்றப்படி யோக்கியதையற்ற அதர்மர்கள் தாம் சட்டப்படி நடப்பவர்போல் காட்டிக்கொண்டு அக்கிரமங்கள் செய்ய இடமுண்டாகிறது. ஆனால் இந்த அக்கிரமமும் அதிக்கிரமமும் நீடித்திருக்காது. ஏனெனில், இவர்களின் சக்தி தர்ம விரோதமான கொள்கையினிடத்திருந்துண்டானதாயிருக்கிறது.

மேலே யெறியப்பட்ட கல்லானது சாசுவத தர்மமான பூமியின் ஆகர்ஷண சக்தியை மீறிக்கொண்டு போவதன்றி, ஜன்னல் கண்ணாடிகள், மரத்தின் காய்கள் இவைகளைச் சின்னப்படுத்தும் சக்தியும் வாய்ந்ததாயினும், அதற்கு இயல்பாக சக்தியில்லாமையால், இரவல் சக்தியின் விசை யடங்கினதும் அது தனது ஜட தர்மத்தை யனுசரித்து பூமியின் ஆகர்ஷண சக்தியால் இழுக்கப்பட்டு பூமியில் வந்து விழுந்து அங்கே முன்போல் அசைவற்றுக் கிடக்கும். அஃதேபோல, அதர்மம், அதாவது சாசுவதமான தர்மவிதிக்கு விரோதமான காரியங்கள் எதுவானாலும் சொற்ப காலத்திற்குத்தான் அதன் விசை செல்லும். பிறகு அது விசை யிழந்து வலியற்றுப்போம். தர்மமோ அப்படியல்ல.

ஆற்றங் கரையிலுள்ள நாணற் புல்லானது காற்று, தண்ணீரோட்டம் இவற்றின் விசையால் தலை சாய்ந்தாலும் அந்த விசை யடங்கினபின் தன் சுபாவ சக்தியால் தலை நிமிர்ந்து நிற்கும். தர்மமும் இத்தகைத்ததேயாம்.

தர்மம் தலையெடுத்து நடப்பதைப் பார்த்து அதர்மர்களும் தலை தூக்கியாடுவது, ஆகாசத்தில் கருணைமழை பொழியும் மேகம் வந்து மூடினதும், அதைப்பார்த்து தன் சுபாவ தர்மத்தால் மனம் குளிர்ந்து தனது அழகான தோகைகளை விரித்தாடும் மயில்களைப்போல் அதன்வர்க்கத்தைச்சேர்ந்ததாய், அதன்சுகுண

மமையாத வான்கோழி ஆடினால் அது எப்படி யிருக்கும்? அப்படிப் போல்தான் அதர்மர்கள் செல்வாக்கும் பலிப்பது மென்று ஒரு நிபுணர் சொல்லியிருக்கிறார். அதைத் தமிழ்க் கவியும் அழகாக மயில் வான்கோழி இவைகளின் உபமானத்தைக் கொண்டு சொல்லியிருக்கிறார். "வேலுமயிலுந்துணை"

———:(*):———

## H. E. THE VICEROY OF INDIA.

## இந்தியாவின் இராஜப்பிரதிநிதி.

———:(‡):———

1910-ம் வூ ஜூன்மீ 11வ ஸிம்லாவிலிருந்து வந்ததொரு தந்தியிலிருந்து "லார்டு மிண்டோவுக்குப் பிறகு ஸர்சார்லஸ் ஹார்டிஞ்சு இந்தியாவின் கவர்னர் ஜனரலாய் வருகிறார்" என்று தெரிய வந்தது. அதற்கு முன் பலமாதங்களாகவே பிரிடிஷ் மந்திரிமார்கள், இந்திய ராஜப்பிரதிநிதி ஸ்தானத்திற்குத் தகுந்த புத்தியும் யுக்தியும், ராஜ தந்திர விஷயங்களில் தீர்ந்த பரிச்சயமும் ஆராய்ச்சியுமுள்ள ஒருவரைத் தெரிந்தெடுத்தனுப்ப வேண்டு மென்று ஆலோசித்து வந்தார்கள். லார்டு கிச்னர், லார்டு மேக்டானெல்டு, லூயிஹார்கோர்ட், எர்ல் க்ரே முதலினோர் இந்திய ராஜப்பிரதிநிதித்துவத்திற்கு உரியவர் களென்று கூறப்பட்ட போதிலும் கடைசியாக ஸர் சார்லஸ் ஹார்டிஞ்சு அவர்களே கவர்னர் ஜனரலாய் நியமனம் பெற்றார். அப்போது இந்தியா இருந்த நிலைமையில் ஒவ்வொரு விஷயத்தையும் ஆரத்திர நன்குயோசித்து இந்தியரிடம் அனுதாபவுணர்ச்சி காட்டும் இயல்பினையுடைய புண்ணிய புருஷரான ஸர் சார்லஸ் ஹார்டிஞ்சு அவர்களை இந்திய ராஜப் பிரதிநிதியாய் நியமித்தனுப்பியது பிரிடிஷ் மந்திராலோசனை சபையாரின் மதியூகத்தை நன்கு விளக்குகின்றது. நம் சக்ரவர்த்தியாரின் தந்தையான எட்வர்ட் அரசர் ஐரோபாவில் சுற்றுப்பிரயாணம் சென்றபோது ஸர் சார்லஸூம் கூடவே சென்று அந்தந்தத் தேசத்து ராஜரீக நிலைமையைத் தெளிவாய்க் கண்டு கொண்டனர். இதன்றி அனேக வருஷகாலம் இதர நாட்டு விவகாரங்களைக் கவனிக்கும் பிரிடிஷ் உதவிக் காரியதரிசியாயு மிருந்து வேலை பார்த்திருக்கிறார். எட்வர்ட் அரசர் எப்போது வெளியிற் புறப்பட்டாலும் ஸர் சார்லஸை அழைத்துச் செல்லாதிருப்பதில்லை. ஸர்சார்ல்ஸிடம் ஐரோபாவிலுள்ள ஒவ்வொரு முடிமன்னருக்கும் மதிப்பதிகம். 1903-ம் வருஷத்தில் ருஷியாவுக்கும் ஜப்பானுக்கும் யுத்தம் நடந்ததல்லவா? அக்காலத்தில் ருஷியதேசத்துத் தலைநகரான ஸென்பீடர்ஸ்பர்கில் பிரிடிஷ்ராயபாரியாய் (Ambassador) ஸர் சார்லஸ் ஹார்டிஞ்சு நியமிக்கப் பட்டார். பொறுப்புமிகுந்த இந்த ஸ்தானத்தில் அவர் அமர்ந்தபோது அவருக்கு 46 வயது. ஒரு சமயம் வட சமுத்திரத்திலுள்ள பிரிடிஷ் டிராலர்களின் (கப்பல்கள்) மீது ருஷியப் போர்க்கப்பல்கள் வெடி தீர்த்தபோது, இங்கிலாண்டிற்கும் ருஷியாவுக்குமுள்ள நேசப்பான்மைக்கு எங்கு குந்தகம் நேரிடுமோ வென்று சஞ்சலம் இருந்தது. எனினும் அச்சமயத்தில் ருஷியாவில் ஸர் சார்லஸ் ஹார்டிஞ்சு காட்டிய மதியூகத்தினாலும் உறுதியான மனோதிடத்தினாலுமே அந் நேசப் பான்மைக்கு யாதொரு குந்தகமும் நேரிடாமல் தப்பியது. அதுகாரணமாகப் பிரிடிஷ் மந்திரிகளுக்கு அவர்மீது அதிகநம்பிக்கையும் சந்தோஷமும் ஏற்படவே, அவருக்கு வெளிராஜ்ய விவகாரங்களைக் கவனிக்கும் பிரிடிஷ் உதவிக் காரியதரிசிவேலை கொடுத்தார்கள்; அவ்வுத்தியோகத் திலிருந்துதான் அவர் நம்மிந் தியாவுக்குக் கவர்னர் ஜனரலாய்ப் புறப்பட்டு வந்தார். ஸர் சார்லஸ் 1888-ம் வருஷத்திற் பிறந்தார்; ஆதலின் அவருக்கு இப்போது 55 வயதாகிறது. கேம்பிரிட்ஜ் கலாசாலையிற் படித்துப் பின்னர் 1880-ம் வருஷத்தில் அந்நிய தேசங்களில் பிரிடிஷ் ராஜ்ய விவகார சம்பந்தமாய்ப் பிரவேசிக்கலானார்.

ஆறு வருஷங்களுக்குப்பிறகுப் பார்ஷியா தேசத்திலுள்ள டெஹரான் பட்டணத்து லீகேஷனுக்குக் காரியதரிசியாய் அமர்ந்து பிறகுதான் ருஷியாவின் தலைநாகரான ஸென்பீடரஸ்பர்குக்குச் சென்றார். டெஹரன் பட்டணத்தில் இருந்தபோதுதான் இவருக்கு இந்தியாவைக் குறித்த விஷயங்களை அடிக்கடி கேட்க சந்தர்ப்பம் நேர்ந்திருக்கவேண்டும். மேலும் 1844-ம் ௵ முதல் 1848-ம் வருஷம் முடிய இந்திய கவர்னர் ஜனரலாயிருந்த வைஸ்கௌண்ட் ஹார்டிஞ்சின் பௌத்திரராவர் நமது வைஸ்ராய். கவர்னர் ஜெனரல்களான லார்ட் மிண்டோ, லார்டு எல்கின் முதலியோர் தத்தம் பெரிய மூதாதைகளின் குடும்ப பாந்தவ்யத்தைப் பின்பற்றி வந்ததைப்போல் ஸர் சார்லஸ் ஹார்டிஞ்சும் கவர்னர் ஜனரலாய்ப் புறப்பட்டு வந்திருக்கிறார். அவர் லேடி ஹார்டிஞ்சோடு பம்பாய்த் துறைமுகத்தில் வந்திறங்கியபோது இந்தியருக்கு எவ்வளவுதூரம் குதூஹலமும் பேரானந்தமும் இருந்த தென்பதை இவ்விடத்திற் சொல்லமுடியாது. புராதனமாய்ப் பெயர் பெற்றிருக்கும் டில்லிமாநகரில் நம் மாக்ஷிமைதங்கிய ராஜ தம்பதிகளின் மகுடாபிஷேகம் சிறப்பாய் நிறைவேறியதே லார்டு ஹார்டிஞ்சினுடைய நிர்வாகத் தின் சுபசகுனமல்லவா? இவ்விதமான பற்பல சுபசகுனங்களோடு புறப்பட்டு இந்தியாவில் கவர்னர் ஜனரலாயமர்ந்து மிகுந்த தைர்யத்தோடும் ஒற்றுணர்ச்சி யோடும் துரைத்தன நிர்வாகத்தை நடத்திவரும் லார்டு ஹார்டிஞ்சு இந்தியரிடம் அனுதாபமுள்ளவர் என்பதை எவர்தான் மறுப்பார்? தைர்யம், அனுதாபம் பொறுமை ஆகிய இவ்வுத்தம குணங்கள் இருக்குமிடத்தில் ராஜதந்திர லக்ஷணங்கள் பரிபூரணமாயிருக்குமென்பதத்ற்குத் தடையுமுண்டோ? ஆனதுபற்றி அவ்வப்போது இருக்கக்கூடிய காலசுபாவத்திற்கு அனுகுணமாகவே, பிரஜைகளின் ஆவசியங்களையும் மற்றுமுள்ள குறைகளையும் நன்குணர்ந்து லார்டு ஹார்டிஞ்சு நிர்வாகஞ் செய்து வருவது நம்மவர்க்கு மிகுந்த திருப்தியைத் தருகின்றது. அற்ப சம்பவங்களை அபாரமானவை யெனச் சொல்லி பீதியை யுண்டுபண்ணுவோர் இங்கு மட்டுமல்ல, இங்கிலாண்டிலும் இருக்கிறார்கள். இவர்களுடைய அறியாமை வார்த்தைகளைச் சிற்சில சமயங்களில் ராஜாங்க நிர்வாகிகள் நம்பித் தளர்ச்சியேனும் கவலையேனும் கொள்ளலாகாது. இத்தியாதி சந்தர்ப்பங்களில் பொறுமையோடும் மனோதைர்யத் தோடும் காலநிலையைச் செவ்வனே ஊகித் துணர்ந்து நிர்வகிப்பவரின் ஆட்சியே நிறைவேறியதாகும். முப்பத்து முக்கோடி ஜனங்களின் க்ஷேமத்தைக்கோரி நிர்வாகஞ் செய்யும் பொறுப்பைத்தாங்கி ராஜப்பிரதிநிதியாய்வந்திருக்கும் லார்டு ஹார்டிஞ்சினிடம் அவ்வுத்தமக் குணங்கள் நிரம்பி யிருப்பதனாலே அவரது நிர்வாகம் பிரஜைகளுக்கு நன்மை பயப்பதாயும் புகழைத் தருவதாயும் இப்போது இருந்து வருவதைப் போலவே அவர் ஆயுராரோக்கிய ஸம்பன்னராய் புகழ், பெருமை, சீர், சிறப்பு ஆகிய இவைகளோடு நீடூழி வாழ்ந்து பிரகாசிக்கும்படி கிருபை புரியுமாறு நாமெல்லோரும் ஒருமித்து எல்லாம் வல்ல இறைவனைத் துதிசெய்வோமாக. சுபம்.

—·——:(*): ———

### The "Children's Day" in India.

## Viceroy's Birthday Celebration.

### An Address to School Children.

## ஸ்ரீ ஹார்டிஞ்சு ஜயந்தி.

(மாக்ஷிமைதங்கிய ராஜப்பிரதிநிதி யவர்களின் ஜன்மதினம்.)

—(:-:)—

'Motto: "கற்றதோர்கல்வியும் மனப்பழக்கம்."

பள்ளியிற் பழகும் பாலர்காள்:—இன்று சாயங்காலம் நாமெல்லோரும் இங்கு 'தமாஷா' வாய்க் கூடியிருப்பதன் காரண மென்ன? இன்று உங்களுக்கு விடுமுறை விட்டிருக்கிறார்களே,

எதற்காக? ஸ்கூல்களையும் மற்ற இடங்களையும் அலங்காரம் செய்திருக்கிறார்களே, எதை பொட்டி? என்று கேட்பீர்களோ, இன்று நமது மாட்சிமை தங்கிய 5-வது ஜர்ஜு சக்ரவர்த்தியாரின் பிரதிநிதியாயும், இந்தியாவின் கவர்னர் ஜனரலாயும் இருக்கும் ஹிஸ் எக்ஸலென்ஸி லார்டு ஹார்டிஞ்ச் (Viceroy and Governor-General of India) அவர்களின் ஜன்மதினம் ஆதலின், அதாவது பிறந்த நாளாதலின், இந்த தினத்தை ஒரு மகோற்சவ தினமாக எல்லோரும் சேர்ந்து கொண்டாடிக் குதூஹலிப்பதற்கே நாமெல்லோரும் இந்த இடத்திற் கூடி யிருக்கிறோம். லார்டு ஹார்டிஞ்சு அவர்கள் உத்தம குணம் வாய்ந்தவர்; ஸர்க்குண ஸம்பன்னர்; 'தேஹி' என்றவர்க்கு 'நாஸ்தி' என்று சொல்லார். இந்தியரிடம் அன்பும், இந்தியா வளம் பெறச் செழிக்க வேண்டு மென்னும் ஆர்வமும், ராஜ பக்தி யுள்ள இந்தியக் குடிகள் க்ஷேமமாய்க் காலங் கடத்த வேண்டு மென்னும் அபிலாஷையும் கொண்ட உத்தமராவர் அவர். ஹார்டிஞ்சு பிரபுவே 1910-ம் ஞு நவம்பர் மீ 23 உ முதல் ராஜப்பிரதிநிதியாய் அமர்ந்து பிரிடிஷ் ராஜரீகத்தை இங்கு நடத்தி வருகிறார். இந்தியாவின் பிரதான பட்டணத்தைக் கல்கத்தாவிலிருந்து டில்லிமாநகருக்கு மாற்றும்படி நம் மாட்சிமை பொருந்திய சக்ரவர்த்தியாரவர்கள், கிரீடதாரணத்திற்காக 1911-ம் வருஷத்தில் டெல்லிக்கு விஜயம் செய்திருந்த போது செய்த அவரது ஆஜ்ஞைக் கிணங்க, சென்ற வருஷத்தில் ராஜப் பிரதிநிதியான லார்டு ஹார்டிஞ்சு அவர்கள் ஊர்கோலத்துடன் டெல்லி நகரத்தினுள்ளே பிரவேசிக்கும் காலையில், சாண்ட்னி சௌக் என்னு மிடத்தில் எவனோ ஒரு பாதகன் இவ்வுத்தமரை மாய்க்கக் கருதி இவர்மீது வெடி குண்டொன்றை எறிய, ஈசுவர கிருபையினாலே அதற்குத்தப்பினா ராலும் வெடி குண்டிலிருந்து கிளம்பிய விஷச்சில்லுகள் அவரது சரீரத்திற் பாய்ந்து அவருக்கு மிக்க அஸௌகர்ய முண்டு பண்ணி, அவரைத் தொந்தரவுக்கு உட்படுத்தி விட்டன: எனினும், ஸர்வவியாபியான பரந்தாமானின் கடாக்ஷ வீக்ஷண்யத்தினாலே, மலை போல் வந்த வில்லங்கம் பனிபோல் வந்த புகையாய் மாறி, உயிருக்கு ஹானி யில்லாமல் தப்பியது நம்மவர் செய்த புண்ணியமே. ஹார்டிஞ்சு பிரபு உயிர் பிழைத்தெழுந்தது புனர் ஜன்மமே யாதலால், குழந்தைகளுக்கு நாம்செய்யும் அப்தபூர்த்தி என்கிற ஆண்டு நிறைவுக் கொண்டாட்டத்தைப் போல அம்மகாப்பிரபுவின் ஜன்ம தினமாகிற இந்த தினத்தை ஓர் ஸுதினமாகக் கருதி, ராஜ விசுவாச பரி பூரிதராய் நாமெல்லோரும் சேர்ந்து கொண்டாடு வோமாக.

பிள்ளைகாள், நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம் இன்னும் ஒன்றுண்டு. இப்போது சிறுவராயிருக்கும் நீங்கள் இன்னுங் கொஞ்சகாலத்திற்குப் பிறகுப் பெரியராய் விடுவீர்கள்; அப்போது உலக உத்தாரணத்திற்கு அவசியமான கார்யங்களில் நீங்கள் பிரவேசிக்கவேண்டிவரும். அதற்குப் பிரதமமாய் வேண்டுவது இளமைப் பழக்கமே. இந்த அர்த்தத்தைக் கொண்டே ஆங்கிலக் கவிவாணர் ஒருவர்

"Boys of to-day become the men of to-morrow; upon them rests the responsibility of carrying on the wide world's work honourably and well with an ever-increasing tendency—so their early training is everything of importance."

என்று சொல்லியிருக்கிறார். இளம் பிராயத்தில் இருக்கும் நீங்கள் வீணில் காலத்தைப் போக்காமல் ஸர்க்குண ஸம்பன்னர்களாய், பிரஜாலட்சணம் பொருந்திய பிரமுகர்களாய், ராஜவிசுவாஸமுள்ள ஸமூஹத்தவராய், ஆவீர்கள். அக்காலத்தில் உங்கள் பேரிலிருக்கும் கடமையைத் திருப்தியாய்ச் செலுத்த விரும்பினால் உங்களுடைய இளமையையே நீங்கள் கருது

தல் வேண்டும்; இதற்காகவே "இளமையிற் கல்" என்று பெரியோர் சொல்லியிருக்கிறார்கள். உங்களுடைய தாய் தந்தையார்க்கு அடங்கியும், உங்களுக்குக் கல்விகற்பிக்கும் உபாத்தியாயர்களுக்குக் கீழ்ப்படிந்தும், சுருக்கிச் சொல்லுமிடத்து உங்களுக்குப் பெரியோராயிருப்பவரிடம் தணிந்தும் பணிந்தும் ஒழுகல் வேண்டும். நம்மையாளும் ராஜங்கத்தாரிடம் பக்தியும் விசுவாஸமும் வைக்கவேண்டும்; நம்மையாள்பவர் பிரிடிஷ்துரைத்தனத்தார்; மாக்ஷிமை பொருந்திய 5-வது ஜார்ஜு சக்ரவர்த்தியாரின் ஏகாதிபத்தியத்திற்கு உட்பட்டிருக்கிறோம். அவருடைய பிரதிநிதியாக இந்தியாவுக்கு வந்திருப்பவர் லார்டு ஹார்டிஞ்சு. இவர் தான் இப்போது கவர்னர் ஜனரலாயிருக்கிறார். இம்மகாப்பிரபுவின் ஜன்ம தினத்தையே இன்று நாம் கொண்டாடுகிறோம். எந்த துரைத்தனத்திற்கு இவர் தலைமையாய் இந்தியாவில் தற்போது இருந்து வருகிறாரோ அந்த துரைத்தனந்தான் பிரிடிஷ் துரைத்தனம். மேன்மை பொருந்திய ராஜதம்பதிகளுக்கு 1911-ம் ஹூ டிஸம்பர்மாஸம் 12உ டெல்லிமாநகரில் மகுடாபிஷேகமான காலத்தில், பஹிரங்கப் படுத்தப்பட்ட ராஜவிளம்பரத்திலும், அதன் பிறகு சக்ரவர்த்தியாரின் திருவாக்கிலிருந்து வந்த திருவாய் மொழிகளினாலும், அவர்கள் இந்தியாவின் க்ஷேமத்தில் மிகுந்தகவலை கொண்டவர்களென்றும், அதில் மிக்க பற்றுடையவர்களென்றும், வெளிப்படையாகவே தெரிவித்திருக்கிறார்கள். அதற்கு அத்தாக்ஷியாக சக்ரவர்த்தியாரவர்கள் நம்மவர்க்குப் பற்பல நன்கொடைகள் கொடுத்திருக்கிறார்கள். அவற்றுள் பிரதம வித்தியாபோத னாபிவிருத்தியைக் கோரி 50 லட்சம் ரூபா சாங்க்ஷன் செய்தது உங்களுக்குத் தெரிந்ததே. ஆங்கிலே அரசாக்ஷியில் நாமடைந்திருக்கும் பலன்கள் பல; "ஆயினும் தானுக்கனியாதது தடியெடுத்தடித்தால் கனியுமா" என்கிற பழமொழிப்படி ஒரு தேசத்தார் தன்முயற்சியால் முன்னுக்கு வரவேண்டு மேயன்றி அந்ய ஸகாயத்தால் முன்னுக்கு வருவது அசம்பாவிதம்; "Nations by themselves are made" என்கிற மூதுரையை மனதில்வைத்து நீங்கள் எல்லாரும் நம்தேசத்தின் பூர்வமஹிமைக்கும் தற்கால நிலைமைக்கும் குறைவுவராமல் யோக்கியதையையே பெறற்கரும் பெருஞ் செல்வமாக மதித்து கிரஹஸ்தாச்சிரமம் என்பது குடித்தன மட்டுமன்றி "குடியின் தன்மை" (Citizenship) என்கிற உயர்பாவமும் அமையப் பெறும்படி உண்மைக்குகந்தவர்களாய் உலகுக்குபகாரிகளா யிருக்கச் சிறுவயதிலிருந்தே பழகிவரல் வேண்டும்.

ஸ்ரீ ஹார்டிஞ்சு ஜயந்தியாகிய இன்றைய தினம் என்றைக்கும் திருநாளாக விருக்க இத்தினத்தைக் குழந்தைகள் கொண்டாட்டநாள (Children's Day) என்று விசேஷம் பொருந்த நியமித் திருக்கிறார்கள். "நன்மைவிதைத்தால் நன்மை விளையும். தீமைவிதைத்தால் தீமை விளையும்" என்ற பழமொழி நீங்கள் கேட்டுள்ளதே. நன்மைவிதைக்க இது மிகவும் ஏற்றதோர் நன்னாளாக விருக்கிறது. ஏனெனில் இன்றையதினம் இன்றைக்கு 55 வருஷங்கள் முன்னாற் பிறந்த ஒரு குழந்தை பாராளும் மன்னர் ஸ்தானத்தில் அவர் "நாவசைய நாடசையும்" என்கிற உச்சித ஸ்தானத்திலிருந்து கொண்டு தனக்குத் திங்குசெய்த பாதகனை நினைத்து சீறிச் சினந்து சிஷ்டஜனங்களை வதைக்காமல், "ஐயோ! இந்தியாவில் இப்படிப்பட்ட மானிடப் பதர்களும் இருக்கின்றனவே," என்று கருணையால் மனமிரங்கி அவனிழைத்த தீங்கை மறந்து பகவான் தன்னைக்காத்து ரக்ஷித்த அதிர்சயத்தைக் கொண்டாட வேண்டிக் கள்ளங்கபடறியாத குழந்தைமனமெல்லாம் தனது பெண்டு பிள்ளைகளோடு இந்த சுபதினத்தைக் கொண்டாட வேண்டுமென்று தீர்மானித்தது "நன்மை விதைத்தலேயன்றி வேறென்னும்!"

" குணநாடிக் குற்றமு நாடி
மிகைநாடி மிக்கக்கொளல்"

விவேகத்தின் இயல்பாம். அந்த விவேகம் அவரிடத்தில் பூர்த்தியாக விருப்பதாகக் காட்டியதன்றி அதைக் குழந்தைகளெல்லாம் அறிந்து அதனுல் விளையும் நன்மைபற்றி எல்லாருள்ளத்திலும், விசேஷமாய்க் குழந்தைகளின் மாசுமருளற்ற வுள்ளத்தில் அந்த வித்து விழுந்துமுளைத்து வேரூன்ற வேண்டு மென்று இந்த ஹார்டிஞ்சு ஜயந்தி ஏற்படுத்தப் பட்டது. ஆகையால் உருவத்தினுல் மட்டமென்றி உண்மையிலும் குழந்தைமனம் மாருத அருட் குழவிகளான எல்லோரும் ஆஞ்சநேயரைப் போல் கைகூப்பி 'ஹிருதாஞ்சலி' செய்து கடவுளின் மஹிமையை ஆடிப்பாடித் துதித்துக் கொண்டாடு வோமாக. ஓம்தத்ஸத்.




*"Come! Let us be the Children of Light!"*

## Hridanjchali.—*The Heart's Tribute.*
### (On Reading Lady Hardinge's Letter.)

### THE CHILDREN'S ANTHEM.

*Specially composed by the Child-Heart.*

For the Children's Celebration of the Viceroy's Birthday

*Motto:* "Her eyes are homes of silent prayer".—*Tennyson*

"Thrice blest whose lives are faithful prayers
Whose loves in higher love endure;
What Souls possess themselves so pure
Or is there blessedness like theirs?"—*Tennyson.*

ஹார்டிஞ்சு பெருமாட்டியின் கிரஹிதம் கண்டளித்த

## ஹ்ருதாஞ்சலி.

—(:‡:)—

### அஹத்தில் குழந்தைகள் ஸ்ரீ ஹார்டிஞ்ச்ஜயந்தி கொண்டாடிய வைபவம்.

*Motto:*—"அம்மா ளெனக்கொரு மாம்பழமீன்ருள்
அதற்குத் தோலுமில்லை நாருமில்லை
கட்டியுமில்லை கொட்டையுமில்லை
தின்னத்தின்ன ருசிக்குமென்ருள்
தெவிட்டாத்தேன் கட்டியென்ருள்
தின்னேன் தெவிட்டவில்லை
தேன்மயக்கம் தீரவில்லை."
—ஆனந்தத் தாய்மொழி.

பல்லவி

*Chorus:*—அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் முழந்தைகள் சொற்கேட்டு.

சரணங்கள்

1. ஹிருதாஞ்சலி—The Heart's Tribute.

1. அம்மா, தாயே! சரணம்! சரணம்!
அடியேன் குழந்தை! யென்ன செய்வேன்!
கோவிந்தா, கோபாலா! கும்பிடுறேன் ஸ்வாமி!
குழந்தையென் மழலைக் குவந்தே பழந்தருவாய்!
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

2. பக்திசிரத்தை—'I give you the Message of Faith.

2. ஹார்டிஞ்ச் பிரபுவாம் அவர்பேர், ஸ்வாமி!
அதிர்சயபக்தியும் சிரத்தையு முண்டவர்க்கு!
நாட்டுக்கு நாயக மாயுள்ள குணசீலர்
வீட்டுக்குப்போனாம் வெடிகுண்டு பட்டப்போ †
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

3. டில்லிக்குள் பிரவேசம்--The State Entry into Delhi.

3. பட்டத்து யானைமேலேறிப் பாங்காய்
பவனிவந்தரசர் முடிசூட்டப் பெற்ற
டில்லியைத் தலைநகராக்கியே அம்மா!
டில்லிக்குள் ப்ரவேச மாகவே வந்தார்.
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

4. கொடியமாபாதகம் செய்வான்—The Social Canker.

4. எழுகடலும் ஒருமிக்கப்பொங்கியே வந்தாப்போல்
எல்லாஜனங்களும் ஒன்றாகக் கூடியே சாய்ந்தார்!
மனிதர்கள் வெள்ளம்போல் ஜனக்கூட்டம் மிகுந்த
கும்பலில் கொடியமாபாதகம் செய்வான்!
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

5. வெடிகுண்டு—The Bomb.

5. கூடவே யிருந்தவன் ஸமயம் பார்த்து
மூடத்தால் நயபயமிரண்டும் விட்டு
மூடியிருந்தவன் மூவுலகும் அதிரவே
வெடிகுண்டா மொன்றை வீசியெறிந் தானும்!
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

6. குறிவாசி—Hitting the Howdah.

6. வீசியெறிந்த வெடிகுண்டு தானும்
ஊசிமுனைத் திராசுபோல் வாசியாச்சென்று
அரசர் ப்ரதிநிதியவர் பத்தினியோடு
அமர் கோலமாயிருந்த அம்பாரி மீதில்,—
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

7. 'அம்மா வெடிகுண்டுபோலிருக்கு'-'I fear it's a Bomb.'

7. பட்டென்று தாக்கவும் சட்டென் றொருவெடி
அண்டங்கள்தானும் அதிரவே கேட்டதாம்!
ஹார்டிஞ்சு பிரபுவும் அதுகேட்டு அப்போ
'அம்மா! வெடிகுண்டு போலிருக்' கென்றார்.
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு

8. மிக்கத்துயரம்—Sorrow for the dead.

8. பக்கத்தமர்ந்த பார்வதியானன்ன தேவியும்
துக்கத்திலாழ்ந்து துடித்துப் பதைக்காமல்
பக்கத்திலிருந்தவன் மாண்டதைக் கண்டு
மிக்கத் துயரத்தில் மூழ்கின ளாகியே,—
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

† 1912-ம் வருஷம் டிஸெம்பர்மீ 23உ.

9. முதுகிலே படுகாயம்—The wound at the Back.

9. பின்புறம் திரும்பிப் பார்க்கவு மப்போ
அன்புடை பர்த்தாவின் முதுகிலே படுகாயம்
பட்டதைக் கண்டவ ளுயிர்தானும் துடிக்கப்
பட்டத்து யானையை நிற்கவே சொன்னார்!
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

10. முனைந்து "நட!"

Urging the Procession to "Go on!"

10. படுகாயம் பட்டாலும் கெடுகாரியம் செய்தாலும்
தொடுகாரியம் தொட்டபின் தொடுபிடி யாயதைத்
தொட்டு முடித்தலே தூயவர் கடனென்று
முட்டுவராமலே முனைந்து "நட" வென்றார்.
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

11. மூர்ச்சை—The Fainting.

11. "நட!" வென்றுசொன்ன சொற்றிறல் வள்ளலும்
"நட!" வென்றுசொன்னசொல்அம்பரத்தேறவும்
நடைமெலிந் தம்பாரி மேலிருந் தம்மா!
இடைசோரத் தலைசாய மூர்ச்சிக்க லானார்!
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

12. பரிதாபக்காட்சி—A Pathetic Scene.

12. அன்புடை பர்த்தா, அற்புத வலிபெற்றோன்
என்புதோள் தெரிய எரிகுண்டின் வெடிகாயம்
பட்டையோ! மூர்ச்சையாய் வீழ்வதைக் கண்டு
தொட்டையோ! பர்த்தாவைத் தோளிலே தாங்கி
[னள்!
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

13. பத்தினி குணத்வனி—The Wife's Heroism.

13. மட்டில்லாப் பொறுமையுடன்தீரம் பொருந்தவே
வட்டில்லாஉலைபோல் உள்ளங்கொதிக்கவும்
தட்டில்லாப்பத்தினிக் கேயுள்ள வலியாலே
கொட்டில்லா முழக்கம்போல் குணத்வனி செய்த
[வள்,—
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

14. அடிமடிக் குழந்தைபோலானர்.
Nursing the unconsious Viceroy.]

14. சட்டென்று பிர்த்தாவை அம்பாரி விட்டங்கே
யதிகஷ்டத்தோடே யானேவிட்டிறக்கினள்:
சதிபதிதர்மத்தை யனுஷ்டித்த வென்னம்மை
யாதரவிலவரும் அடிமடிக்குழந்தைபோலானர்!
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

15. 'தாய்'—The Mother Ideal.

15. அடிமடியில்கருத்தாங்கி யதைவளர்க்கும் பாக்கி [யத்தால்
கொடுமுடிபோல்மன்பதைக்குச்சிகரமாயேற்பட்டுக்
கெடுபிடியிலாத்தன்மையாலன்புக்குறைவிடமாய்த்
தொடுபிடியாற்றுயராற்றும்தூயவரே'தாய்'அம்மா!
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

16. ஸ்ரீ ஹார்டிஞ்ச் ஜயந்தி
H. E. Lord Hordinge's Children's Day.

16. தாயன்பாலென்னம்மை ஹார்டிஞ்சு பெருமாட்டி
தூயவராம் குழந்தைகளைத் தன்னிதயத் துள்ளிரு [த்தி
சீயவராம் காவலர்கோன் ப்ரதிநிதியாம்பர்த்தாவின்
ஸ்ரீஜயந்தி கொண்டாடச் சொன்னவர்தம்குடியனே [த்துங் காத்தருள்வாய்!
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

17. "இன்றைப்போல் என்றைக்கும் கொண்டாடுவோம்."
The Annual Celebration of the Day.

17. அம்மா, தாயே! மஹாராஜ்ஞி!
அடியேம் குழந்தைகள் உனைத்தொழுவோம்!
மிடிதீர ஹார்டிஞ்சு ஜயந்தி இன்றைப்போல்
என்றைக்குங் 'குடிவாழக்கோன்வாழக்'கொண் [டாடுவோம்!
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

18. வாழி-Prayer for Blessings on the Country and the King.

18. வாழிமிகவாழியென்று வாழ்த்தவலி தந்தருள்வாய்
"வரப்புயர!" வென்றம்மை வாழ்த்தினர் கோனே [யல்லோ
"வரப்புயர, வயலுயரக், குடியுயரக், கோனுயர"
வரந்தருவாய்! அம்மாதாயே! இதுநாங்கள் கேட் [கும் பழம்.
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

ஓம் தத்ஸத்.

"BURNS' GIFT TO THE BAIRNS."

(*Specially Composed for the Children's Day.*)

## THE HONEST MAN.

——:(*):——

"The honest man, though e'er so poor
Is King of men for a' that."—*Burns.*

## யோக்கியன்.

——(:o:)——

"யோக்கியன்தானே பாக்கியனுவான்."

I

யோக்கியனென்பான் யதார்த்தமுடையான்
போக்கியமவனுக் கென்னதான்குறையினும்
யோக்கியதையஃதுடன் குறையவேமாட்டா
தாக்கியும்அழித்தும் காப்பவனவனேத்தானே
பாக்கியம்எல்லாம் கொடுத்துக்காப்பன்காணே!

II

யதார்த்தமாவது வாக்குப்பொய்யாமை
பதார்த்தமெல்லாம் யதார்த்தமானல்
யதார்த்தம்தானே பரார்த்தமாகும்
பதார்த்தமெல்லாம் நிஜார்த்தமாவதும்
யதார்த்தமாகவே தானவனெனபின்.

III

தானவனெனபின் தத்துவமெலாம்விளங்கும்
நானவனெனபின் 'விஷ்ணுமயம் ஜகத்'எலாம்:
வானவர்தேவரும் தானவனுகவேவணங்குவர்:
போனவர்வந்தவர் பொய்யுரைசொன்னவர்
கோனவன்பெருமையைக் கோதிலாதுணரார்.

IV

உணரார்உணர்விலார் உணர்த்தினுமுணரார்
உணராவியல்பும் உண்மையிற்சடமதாம்
உணராப்பொருளுக்குடல்பொருளாவியுமில்லை!
புணரார்போக்கிய போகமுமறிந்தவர்:
உணரார்குணமொடு குற்றமுநற்றமும்.

**Specially composed for Lord Hardinge's Children's Day. (20th June 1913.)**

## Rabindranath Tagore's Prayer to God.

——:(o):——

*The Indian Messenger* of Calcutta reprints the following noble and beautiful prayer of Rabindranath Tagore from his now world-famous *Gitanjali*:—

"This is my prayer to Thee, My Lord—strike, strike at the root of penury in my heart.

"Give me the strength lightly to bear my joys and sorrows.

"Give me the strength to make my love fruitful in service.

"Give me the strength never to disown the poor or bend my knees before insolent might.

"Give me the strength to raise my mind high above daily trifles.

"And give me the strength to surrender my strength to Thy will with love."

——:*:——

## வரகவி ரவீந்திரநாத் தாகோர் பிரார்த்தனைக் கொத்து.

1. அண்ணலே யுன்ற னடிபணிந் தன்பன்செய்
விண்ணப்ப மீதையே! வேண்டினேன் வரந்
[தருவாய்!

2. ஏழையே னுள்ளத் துறைதரித்திர மத்தனை
[யும்
பிழைதிருத்திநிர்மூலமாகவேதீர்த்திடுவாய்!

3. துக்கமொடு சந்தோஷம் வருவனவெ லாமை
[யே!
மிக்கவெளி தாகநான் பொறுக்கவலி தந்திடு
[வாய்!

4. அன்புமிகுந் துனைத்தொழுவே யாசைகொ
[ண்டே னம்மானே!
என்பணியும் வளரவேதா னெனக்குவர மரு
[ள்வாய்நீ!

5. 'ஏழைபங் காளிநீ' யெனவறிந்தே னுனையுள்
[ளத்
தேழைகளை யொறுக்காவண்ண மெனக்கு
[வலி தந்திடுவாய்!

6. கர்வமிகுவல்லாளகண்டரைக்கண்டுழிநான்!
'ஸர்வமுநீ'யென்றவரைப் பணியாத படியெ
[னக்குத் திடமருள்வாயென்னீச!

7. தினமெனக்கு நேருசிறு தொல்லைகளில் தலை
[யிறங்கி
மனஞ்சிதரு துன்மனஸே சித்திக்க வரமருள்
[வாய்!

8. என்வலிதா னெவ்வளவே யாயிடினு மத்த
[னையு
முன்வலியே யென்றுணர்ந் துனக்கடிமை யா
[குமொரு
* தன்வலியை வேண்டினேனுன் எனக்கிந்த
[வலியின்று
என்னீச! எனையுனக்கின் னடிமையாக்கொ
[ளருள்புரிந்தே!

['கவிசக்ரவர்த்தி' யென்று இராஜப்பிரதிநிதியவர்களால் புகழப்பெற்ற ஸ்ரீமத் ரவீந்திரநாத் தாகோர் அவர்கள் 'கீதாஞ்சலி' யென்னுமவர் மஹிமைபெற்ற கிரந்தத்திலிருந்தெடுத்து ஸ்ரீஹார்டிஞ்ச்ஜயந்தி கொண்டாடும் சிறுவர்க்காகத் தமிழ்செய்யப்பட்டது இது. C. V. S.]

***Children's Special: H.E. Lord Hardinge's Birthday**

## "Three Words of Strength."

MOTTO: "*Now remains Hope, Faith and Love; but the greatest of them all is Love.*"

——(:o:)——

**"Hope, Faith and Love."**

I

Hardinge, My Lord, true-hearted Son of Man,
On bended knees I bow to the Christ in thee
And pray to the Voice of Faith that urged "Go on!"
Heeding not the demon that tore thy flesh from thee!

II

England's Empire over the raging seas
She owes to Nelson's Voice of † Duty t'be done!
England's Empire over the Mind that feels
That "Lady with the lamp" ‡ founded on her "Duty" "Done!"

* ஆத்மசக்தி.

† "England expects every man to do his duty.

‡ Miss Florence Nightingale.

III

England's Empire over our people's heart
The mother-heart of Victoria the Good did found !
But the Empire of Man over hearts that smart
The Voice of Faith that faltered not' *alone* could found.

IV

Henceforth'n Imperial Delhi's Crown shall stand
Thy Glorious Form of Faith on Elephant mounted
The 'ternal symbol of the Spirit that stand
And guide a Nation's path to the Goal it counted.

V

The Sovereign-Lord, his message of Hope did give;
Our own true Lord, the Viceroy, gave us Faith!
'Tis now India's turn Her Supreme Message to give:
And that's *Love to thee and thine surpassing both Hope and Faith.*

ANANDA MISSION, LALITALAYA, MADRAS, S. } C. V. SWAMINATHAIYAR, K.S.S.A.

## CHILDREN'S TRIBUTE OF LOVE.

*Motto:* "Behold a man raised up by Christ !
The rest remaineth unrevealed;"—*Tennyson 'In. Memoriam.'*

### ஸ்ரீ ஹா'ர்டிஞ்ச் பிரபு ஜயந்தி.

### குழந்தைகள் வாழ்த்துத்துதி.

**"மூவாறுமாகிநின்றாள் வித்தையோடவித்தையாம்**
**கலைகளென்ன காமியமென்ன!"**

ஹார்டிஞ்ச்பிரபுவே யருள்வலியுடையோய் !
பாரிடிஞ்சாலும் வானிடிஞ்சாலும் பொய்
[யுரை சொல்லாய்!
பேரிடிமுழக்கம் போலுயிர்வாங்கும்பாதகக்
கூர்வெடிகுண்டின் வின்னுயிர்வாங்கவே
மாரிடிநெஞ்சம்நினைத்தவஞ்சகப்பேய்களின்
6. கூரிடிகாயம் பட்டுப் பதைத்து,மூர்ச்சித்த
[போதும்—
சீரடிசாந்தம் குறையா துள்ளம் தடுமாறாது
மானிடவெள்ளம் போலுள கூட்டத்திடை
[யிருந்தையே
நண்ணிடை மின்னாளுன்பணி செய்யவே
கண்ணுடை வள்ளலே கருணையே உருவாய்
மின்னிடைத் தோன்றிய பொன்னுரு வெ
[ளிபோல்
12. மண்ணிடைத் தோன்றிய மாதவக் கொழுந்
[தே !
உன்திரு நாளைப் பெருநாளாக் கொண்டா
[டக்
கூடின குழந்தைகள் நாங்களெல்லோரும்
[குதூஹலத்துடனே
வாழிமிகவாழி யென்றுவாழ்த்துகிறோம்ஐய !
[வும்மை!
பதிவிரதா சிரோமணியாப் பாரிலுள்ளோர்
[துதிக்குமம்மை
ஹார்டிஞ்சு பெருமாட்டி யன்பிலேநீ ரெங்நா
[ளும்
18. துன்பின்றி வாழ்கவென்று துதிக்கிறோம் கட
[வுளையே !

ஓம்தத்ஸத்.

திருமயிலாப்பூர், லளிதாலயம், 1913-ஆு ஜூன்மீ 20உ

* Under this head were issued this and other pieces of poem in Tamil specially composed for the occasion, as a Supplement to the Vivekachintamani on "THE CHILDREN'S DAY" and distributed free among the School children on that day. We regret that our unaided means did not permit of as many copies being printed as there were demands among the children. We therefore reprint it here and them intend giving them a still more PERMANENT FORM by adding them to the Volume of "Lyrics and Lay Songs of Temple Legends in the *Viveknmanjari Series.*

**THE VICEROY'S BIRTHDAY:** *Patters Garden treat to Children:*-Mr. C.V.Swaminatha Iyer of the *Vivekachintamani* has issued a CHILDREN'S SPECIAL' supplement containing in English a poem entitled. "Three words of strength:—"Hope, Faith and Love," together with a Prayer of Rabindranath Tagore from his *Gitanjali* in Tamil 'BURNS' GIFT TO THE BAIRNS' presenting the ideal of "the Honest Man" and THE CHILDREN'S TRIBUTE OF LOVE,' to impress the importance of the occasion in children's mind. This was presented to every winner of the prize by the chairman Mr. J. H. Stone, C. I. E. at the afternoon amusements and treat given to the children by Mr. Lodd Govindoss Krishnadoss at Patters Garden over which he presided. (It was also distributed in the morinng of the Children's day at the P. S. High School meeting at Mylapore.)—*The Indian Patriot.*

SHORT STORY:

## The Slaves of Passion.

### ஜகமோஹன தாஸர்கள்.

(ஒரு சிறுகதை).

(87-வது பக்கத்தொடர்ச்சி.)

எதைக்கண்டு அப்படி திகைத்துப்போனுர்? உள்ளே அவருடைய தம்பி மோஹனதாஸ் மிஸ்மேரிமார்ஸ்டனேடு கைகோர்த்துப் பேசிக் கொண்டிருக்கக் கண்டார்.

வேலைக்காரிவந்து கதவைத்திறந்து முன்னுள்ளைக்காட்டி 'இங்கே யுட்காருங்கள்' என்று உபசரித்தாள்.

ஜயதாஸுக்கு அவருடைய மனேதிடமெல்லாம் பறந்து போய்விட்டது. மிட்டாய்ப் பொட்டலத்தைக் கையில்கொடுத்து அதைத்தின்று கொண்டிருக்கையில் ஜயதாஸ் மிஸ்மேரி மார்ஸ்டனைப்பார்த்து "மனைவியாகவிருக்கக் கேட்கவந்தேன்" என்று கேட்கவேண்டுமென்று தீர்மானித்து வந்தார். தனது தம்பி மோஹனதாஸோடு அவள் தாராளமாகப் பேசிக்கொண்டிருந்ததைக் காண அவருக்கு மனம் கலங்கிவிட்டது. மிட்டாய்ப் பொட்டலத்தை அப்படியே மேஜைமேல் வைத்துவிட்டார். ஒன்றும் தோன்றுமல் திகைத்துப்போய் உட்கார்ந்திருந்தார்.

மிஸ்மார்ஸ்டன் ஐந்து நிமிஷமாகுமுன் மோஹனதாஸை யனுப்பிவிட்டு ஜயதாஸ் இருந்த இடம் வந்து அவரை யோகக்ஷேமம் விசாரித்தாள்.

"இந்தப்பட்டாடை எனக்கு மிகவும் அழகாயிருக்கிறதென்று தங்கள் தம்பி மோஹனதாஸ் இப்போதான் சொல்லிவிட்டுப் போகிறுர்" என்றுள்.

ஜயதாஸ் "அப்படியா!" என்று மட்டும் சொன்னுர்.

"ஏன் நீங்கள் அவரைக்கண்டு சேரவில்லையோ!"

"அவனை தினம்தான்பார்க்கிறேன். உன்னைக் காணவந்தேனேயன்றி அவனைக்காண வரவில்லை."

"சந்தோஷம்! வாருங்கள்! உள்ளே போகலாம்."

ஜயதாஸ் தட்டுத்தடுமாறிக்கொண்டு எழுந்ததில் மிட்டாய் பொட்டலம் மேஜையிலிருந்துருண்டு கீழே விழுந்தது.

"அது என்ன?" வென்று மிஸ்மார்ஸ்டன் அதை யெடுத்துப்பார்த்தாள். மிட்டாய்ப் பொட்டலமாயிருக்க ஆச்சரியப்பட்டு அவரைவுறெடுத்துப் பார்த்தாள்.

"இல்லை! நான் உன்னை இன்று எனக்கு அந்தரங்க காரியதரிசியாக நியமிக்க உத்தேசித்து வந்தேன். மாசம் 250 ரூபாய் சம்பளம்; உனக்கு சம்மதம் தானே என்றுர்.

இப்பொழுது தான் தங்கள்சகோதரர் மாசம் 200 ரூபாய் கொடுப்பதாகச் சொல்லி அவருக்குக் காரியதரிசியாகவிருக்கச் சம்மதமாவென்று கேட்டுப்போகிறுர். இன்னம் ஒருவாரத்தில் பதில் சொல்வதாகச் சொன்னேன். அந்த வேலை வேண்டாமென்று இப்பொழுதே அவருக்கு எழுதிவிடுகிறேன்" என்றுள்.

"சரி! அப்படியே செய்! சந்தோஷம்!"

"இந்த மிட்டாய் பொட்டளம் யாருக்கு? இதிலுள்ள மிட்டாய்கள் மிகவும் நேர்த்தியாயிருக்கின்றன. அவைகளைப் பார்க்கவே நாக்கில் ஜலமூறுகிறது" என்றுள்.

"உனக்கென்றுதான் வாங்கிக்கொண்டு வந்தேன்."

"எனக்கா! எனக்கா!" என்று கேட்டுக்கொண்டே அவர் முகத்தை உற்றுப்பார்த்தாள்.

ஜயதாஸ் மனம் கலங்கிப்போனுர். உள்ளதைச்சொல்லவும் தைரியமில்லை; ஒளிக்கவும் சாமர்த்தியம் போதவில்லை. என்னவோ உளறினுர். அதை கவனிக்காதவள்போல் மிஸ்மேரி மார்ஸ்டன் அம்மிட்டாயை வாயில் போட்டுக்கொண்டு அதன் ருசியைப்பற்றிப் புகழ்ந்தாள்.

"இந்த மிட்டாய் வெகு ருசியாயிருக்கிறது. இது வெகு அழகாயிருக்கிறது. இது வெகு நேர்த்தியாகச் செய்யப்பட்டிருக்கிறது!" என்றுள்.

"ஆம் எல்லாம் உனக்கென்றுதான் வாங்கி வந்தேன்!" என்றார் ஜயதாஸ்.

"எனக்கா!" என்று அவள் அவரைப்பார்த்தாள்.

ஜயதாஸுக்கு இருதயம் படபடவென்று அடித்துக்கொண்டது. உள்ளதைச் சொல்ல தைரியமில்லை.

அவர் மனதை யறிந்துகொண்ட மிஸ்மாரி மார்ஸ்டன் ஒன்றும் தெரியாதவள்போல், "இதெல்லாம் என்னத்திற்கு! இனிமேல்வேண்டா" மென்று சொல்ல வாயெடுத்தாள்.

ஜயதாஸ் அதையறிந்துகொண்டு "இல்லை!" புதிய காரியதரிசி நியமனம் செய்கையில் மிட்டாய் வாங்கிக்கொடுப்பது எங்கள் வழக்கம்" என்றார்.

"அது நல்ல சம்பிரதாயம்! வெகு அழகாயிருக்கிறது. ருசியாகவுமிருக்கிறது" என்றாள் மேரி. ஜயதாஸுக்குப் போனபிராணன் திரும்பி வந்ததுபோலிருந்தது. இவளைப் பெண்டுகொள்ளலாமென்கிற ஆசை திரும்பிவந்தது. ஆனால் அப்பொழுது பேச அவருக்கு நாவெழவில்லை. அப்புறம் பார்த்துக் கொள்ளலாமென்று அவளைப் பெண்டு பேசாமல் வேலைக்கு வரமட்டும் உத்தரவு கொடுத்துவிட்டு இல்லாத மனோராச்சியங்களெல்லாம் செய்துகொண்டு தன் பெங்களாவுக்குத் திரும்பிப்போனார்.

மறுநாள் ஒன்பதரை மணிக்கு மிஸ் மேரி மார்ஸ்டன் ஜயதாஸுடைய ஆபீஸுக்கு வந்தாள். ஆபீஸ் விஷயமான வேலைகளைப் பார்ப்பதும் வீட்டுக்குத் திரும்புவதுமாக விருந்தாள்.

இவள் வந்தது முதல் ஜயதாஸுக்கு அதிர்ஷ்டம் குறைந்து வந்தது. அவர் என்னதான் முன்யோசனையோடு சாமார்த்தியமாய் பங்குகளை விற்கவோ வாங்கவோ ஏற்பாடு செய்தாலும், மற்றொருவர் அவருடைய 'குட்டை'யறிந்து கொண்டு அவருக்கு முன்னாலே பங்கு விற்று லாபத்தைக் கட்டிக்கொண்டுபோனபின் கடைசியில் நஷ்டப்படும்படியான பாகம்மட்டும் இவர் பங்குக்கு விழுந்தது. ஒருவாரம் இரண்டுவாரம் மூன்றுவாரம் ஆயிற்று. அவருடைய துரதிர்ஷ்டம் அவரை விட்டபாடர்கவில்லை. ஒரு மாசமும் ஆய்விட்டது. இன்னமும் நஷ்டமேதான் வந்துகொண்டிருந்தது. இதில் ஏதோ மோசமிருக்கிறதென்று ஜயதாஸ் சமுசயிக்கலானார். தன்னுடைய 'குட்டை' யாரோ ஆபீஸுக்குள்ளிருந்துகொண்டு வெளியிட்டுவருகிறார்களென்று தெரிந்துகொண்டார். ஆனால் மிஸ் மேரி மார்ஸ்டன் பேரில் அவருக்குச் சமுசயம் உதிக்கவில்லை. வேறு எப்படித்தான் வெளியாகிறதென்றும் தெரியவில்லை.

ஜயதாஸ் பெண்களிடம் மணம் பேசுவதில் அசடராயிருந்தாலும் அவருடைய சொந்த வியாபார விஷயங்களில் அவர் கைதேர்ந்தவர். இப்படிப்பட்ட நஷ்டம் ஏதோ மோசமின்றி வராது என்று அவருக்கு நிச்சயமாய்த் தெரிந்தது. அந்த மோசத்தைக் கண்டுபிடிக்கத்தான் அவரால் முடியவில்லை.

உடனே ஜயதாஸ் ஒரு யுக்திசெய்தார்.

IV

திருடனைப் பிடிக்கத் திருடனே வேண்டுமென்பது பழமொழி. பெண்கள் செய்யும் சூதைக் கண்டுபிடிக்கப் பெண்ணையே தான் பிடிக்கவேண்டும், இல்லாவிட்டால் நமது ஜபம் சாயாது என்று நினைத்தார்.

அரண்மனைக்காரன் தெருவில் "மேதாரீவர்ஸ்" என்றொரு சாமர்த்திய ஸ்திரீயிருந்தாள். அவள் துப்பறியும் போலீஸ் சேவகத்தில் அமர்ந்திருந்தவள். சர்க்கார் சேவகம் சல்லியமாயிருக்கிறதென்று அதை விட்டுத் தொலைத்துவிட்டு சொந்தத்தில் உளவு கண்டுபிடிக்கும் தொழில் நடத்திவந்தாள். அவள் வீட்டில்தானே "ப்ரைவேட் டிடெக்டிவ் ஆபீஸ்" ஒன்று வைத்திருந்தாள். அவளைக் காணவேண்டி ஜயதாஸ் அங்கே சென்றார்.

ஜயதாஸ் உள்ளே நுழைந்தபோது **மேதா ரீவர்ஸ்** ஏதோ சில படங்களை வைத்துக்கொண்டு பார்த்துக்கொண்டிருந்தாள்.

ஜயதாஸ் தான் உள்ளே வந்திருப்பது அவளுக்குத் தெரியவேண்டி தொண்டையைத் திருத்திக் கொள்பவர்போல் கனைத்தார்.

மேதா ரீவர்ஸ் உடனே அவரைப் பார்த்து "வாருங்கள், வாருங்கள், உட்காருங்கள் !" என்று உபசரித்தாள்.

அவர் உட்கார்ந்த அரை நிமிஷத்துக்கெல்லாம் அவளும் வந்து உட்கார்ந்து வந்தகாரியம் என்ன வென்று விசாரித்தாள்.

ஜயதாஸ்:—"என்னைத்தான் தெரியுமே! என தாபீஸில் நான் பணவியாபார சம்பந்தமாய் நடத்தும் காரியங்கள் முன்போலப் பலிப்பதில்லை. எப்படியோ 'குட்டு' வெளியாய் விடுகிறது! அதைக்கண்டு பிடிக்கவேண்டும்" என்றார்.

மேதா.—உங்கள் இரகஸியங்களை ஆபீஸில் யாருக்கு முதல் முதல் வெளியிடுகிறீர்கள் ?

ஜயதாஸ்:—ஒருவருக்கும் வெளியிடுவதில்லை. என்னுடைய காரியதரிசி மிஸ் மேரி மார்ஸ்டனுக்கு சொல்லி அச்செழுத்துசளில் கடித மெழுதச் சொல்கிறதுண்டு. அவள் "டைப்" செய்ததும் உடனே கடிதத்தை முத்திரைகுத்தி இரகஸியமாய் அனுப்பி விடுவேன்.

"கடிதம் கொண்டுபோகிற ஆள் எப்படி ?"

"அவன் வெகுகாலமாய் என்னிட மிருக்கிறான். மிகவும் நம்பிக்கையுள்ள ஆள். அவனிடத்தில் சந்தேகமில்லை."

"ஆனல் புதிய செக்ரிடெரி ஒருவரை வைத்துக் கொள்ளுங்கள்."

"என்னுடைய செக்ரிடெரி பேரிலா சந்தேகம்? அவள் அப்படி செய்யவேமாட்டாள்."

"நான் ஒருவர் பேரிலும் சந்தேகப்படுவதாகச் சொல்ல வில்லையே! அவளோடு புதிதாய் இன்னொருவரை அந்த வேலைபார்க்க அவளுக்கு சகாயமாக வல்லவோ வைத்துக்கொள்ளும்படி சொன்னேன். அதாவது என்னையே அந்த வேலையில் அமர்த்திக் கொள்ளுங்கள். அப்பொழுதுதான் நான் உளவு கண்டு பிடிக்க முடியும்." என்றாள்.

"சரி ! அப்படியே நீ உதவி காரியதரிசியாக வேலைபார்க்க வரலாம்!" என்று சொல்லிவிட்டு ஜயதாஸ் சிந்தாக்கிராந்தனுய் அவள் ஆபீஸை விட்டுப்போனர்.

மறுநாட்காலையிலே நரைத்தமயிரும் ஒட்டிய கன்னமும் மெலிந்ததேகமுமாயுள்ள ஒரு ஸ்திரீ கேவலமான உடைதரித்துக்கொண்டு ஜயதாஸுடைய ஆபீஸில் நுழைந்து அவரைப் பார்க்கச் சென்றாள்.

அங்கிருந்த குமாஸ்தாக்கள் வேலைக்காரர்களெல்லாரும் இந்த "சோளக்கொல்லை பொம்மையை எங்கே பிடித்து வந்தாரோ இவர்? இவருக்குக் கண்ணில்லை போலும்!" என்று சொல்லிக்கொண்டு நகைத்தார்கள்.

ஜயதாஸ் மேதா ரீவர்ஸ் வந்ததும் அவளை மிஸ் மேரி மார்ஸ்டன்வசம் ஒப்புவித்து இவளை உனக்கு உதவியாக அளித்திருக்கிறேன் என்று சொன்னர்.

மிஸ்மேரி மார்ஸ்டன் "சரி!" யென்று ஒப்புக்கொண்டு அவளைப்பார்த்ததும் தனக்கு வந்த சிரிப்பை யடக்கிக்கொள்ளவேண்டி முகத்தைத் திருப்பிக்கொண்டு போய்விட்டாள்.

ஜயதாஸும் மேதாவும் தனியே இருந்தார்கள். அவளுடையைச் சுட்டி "ஏன் இது?" என்று சாடையாகக் கேட்டார்.

"அதுவா! சொல்லுகிறேன்!" என்று தலையசைத்தாள்.

முதல்நாள் ஆபீஸ் நடவடிக்கைகளை யெல்லாம் நன்றாக ஊன்றிப்பார்த்து அறிந்துகொண்டாள்.

"தரவுகாரருக்கு பங்குகள் விற்கவோ வாங்கவோ உத்தரவு அனுப்புவது எப்படி?" யென்று கேட்டாள்.

"நான் வாயால் சொல்வதை காரியதரிசி குறித்துக்கொண்டு "டைப்" செய்து (அச்செழுத்தில் எழுதிக்கொண்டு) வருவாள். அதை நான் கையெழுத்து செய்தனுப்பி விடுவேன்" என்றார்.

"காரியதரிசி வெளியேறுமுன் காரியம் முடிந்துபோய்விடுமாதலால் அவள் அந்த ரகஸியங்களை வெளியிடுவதெப்படி?"

"அவள்பேரில் அப்படி சமுசயிக்கப்படாது! உங்கள் இரகஸியமெல்லாம் ஒருமணி நேரத்துக்குத்தான் பரமரகஸியம்! அப்புறம் அதைப்பற்றி யுங்களுக்குக் கவலையில்லை."

"அந்த ஒருமணி நேரத்துக்குள் தான் எப்படியோ 'குட்டு' வெளியாகி வருகிறது! ஆயிரம், பதினாயிரம், லக்ஷமென்று நஷ்டம் வந்துவிடுகிறது. அதுதான் எனக்கு ஆச்சரியமாகவிருக்கிறது"—என்றார் ஜயதாஸ்.

"சரி! ஒரு உபாயம் செய்யுங்கள்! தரவுகாரர்களுக்கு உங்கள் கையினாலேயே ஒருகடிதமெழுதி உங்களிருவருக்கும் ஒரு சங்கேத பரிபாஷையேற்படுத்திக்கொள்ளுங்கள். அதாவது "ஆம்" என்றால் "இல்லை"யென்று அர்த்தம். "செய்யாதே" யென்றால் "செய்" என்று அர்த்தம், 'விற்காதே' யென்றால் 'விற்றுவிடு' என்று அர்த்தம், 'வாங்கு' என்றால் 'வாங்காதே' யென்று அருத்தம்—இப்படி எதியென்றால் பிரீதி, கல்யாணம் என்றால் சிரார்த்தம் என்று அர்த்தம் செய்துகொள்ள வேண்டியதென்று ஒரு சங்கேதமேற்படுத்திக் கொள்ளுங்கள்." என்றாள் மேதா ரீவர்ஸ்.

"ஆஹா! இந்த யுக்தி எனக்குத்தோன்றாமற் போயிற்றே!" யென்று சொல்லி ஜயதாஸ் உடனே காகிதம் பேனாவெடுத்து அப்படியே செய்தார். செய்துவிட்டு மிஸ் மேரி மார்ஸ்டனுக்கு வழக்கம்போல் கடிதமெழுத வேலையிட்டார்.

மேரி அவருள்ளே வரும்போது ஜயதாஸ் கால்பட்டு அவருடைய பக்கத்திலிருந்த காகிதக்குப்பைக்கூடை கவழ்ந்துபோய்விட்டது.

மேதா ரீவர்ஸ் அதை வாரிப்போடுகிறவள் போல் அத்துண்டுகளையெல்லாம் பார்த்துப் போட்டாள். அதிலே ஒரு முக்கியமான கடிதம் முதலில் 'டைப்' செய்து தப்பாகப்போய் விட்டதென்று கிழித்துப்போடப்பட்டிருந்தது.

அத்துண்டைப் பார்த்ததும் ஜயதாஸ் "அது நான் எழுதச் சொன்னகடிதங்களில் அதி முக்கியமான ஒன்று! எப்படியோ அதன் குட்டு வெளியானதினால் எனக்கு 50 ஆயிரம் ரூபாய் நஷ்டம் நேர்ந்தது" என்றார்.

"ஆ! அப்படியா!" என்றாள் மேதா ரீவர்ஸ். அன்று சாயங்காலம் வேலை முடிந்து வீட்டுக்குப் போகையில் தான் வழக்கம்போல் மிஸ் மேரிமார்ஸ்டனோடு போகாதபடி தன்னை ஆபீஸில் இருந்துவிட்டுப்போகும்படி கேட்டுக்கொள்ளவேண்டி டைப்செய்த துண்டுக்கடித மொன்றை மற்றக்கடிதங்களோடு வைத்து ஜயதாஸிடம் கையெழுத்து வாங்குவதற்காக அனுப்பி வைத்தாள்.

ஜயதாஸ் அந்த துண்டுக் கடிதத்தைப் பார்த்துவிட்டு, அதைக் கிழித்தெறிந்துவிட்டு அதனுடைய ஸ்தானத்தில் வேறு கடிதமொன்றை வைத்து சாயங்காலம் $5\frac{1}{2}$ மணிக்குமேல் வந்து உதவி காரியதரிசி தன்னைப் பார்த்துக்கொண்டு போகவேண்டியது என்று ஒரு குறிப்பெழுதி வைத்தார்.

அதைப்பார்த்ததும் மேதாரீவர்ஸ் முகத்தைச்சுளுக்கிக்கொண்டு வேண்டாவெறுப்பா யிருப்பவள் போல் காட்டிக் கொண்டாள். மிஸ்மேரிமார்ஸ்டன் "வேணும்!" என்று உள்ளுக்குள் சிரித்துக்கொண்டு போய்விட்டாள்.

அவள் போனதும், மேதா ரீவர்ஸ் மிஸ்மார்ஸ்னுடைய காகிதக் குப்பைக் கூடையைக் கொட்டி ஆராய்ந்தாள். அதிலே முன்கண்டது

போல் இன்னொருகடிதம் கிழித்துப் போடப் பட்டிருந்தது. அந்தத்துண்டுகளை சீக்கிரம் பொறுக்கி யெடுத்துச் சேரவைத்து ஜயதாஸுக்குக் காட்டினுள்.

"இதுவும் நான் எழுதச் சொன்ன அதிமுக்கியமான கடிதங்களில் ஒன்றுதான். நீ சொன்னபடி சங்கேதம் செய்து கொண்டிரா விட்டால் இதன் குட்டு வெளியானதினுல் $1\frac{1}{2}$ லக்ஷ ரூபாய் நஷ்டம் வந்திருக்கும். அந்த நஷ்டம் வராது காப்பாற்றின புண்ணியம் உன்னுடையது" என்ருர்.

"நல்லது! நானொரு தந்திரம் சொல்லுகிறேன், நாளைக்கு அந்தப்படி செய்யுங்கள், அப்புறம் பார்ப்போம்" என்ருள் மேதா ரீவர்ஸ்.

"அப்படியே செய்கிறேன் சொல்" என்ருர் ஜயதாஸ்.

"நாளைக்கு நீங்கள் மஹாமுக்கியமான கடிதமொன்று எழுதச் சொல்ல வேண்டும். அதனுல் வரும் லாப நஷ்டம் கோடிக் கணக்காயிருக்கவேண்டும். அதற்கு வேண்டிய சரக்குகளை யெல்லாம் திரட்டி எவ்வளவு பொய் சேர்க்கலாமோ அவ்வளவையும் சேர்த்து ஒரு கடிதம் தயார் செய்து வையுங்கள். அது பரமரகஸியம்; உதவி காரியதரிசிக்குக்கூடத் தெரியக்கூடாதென்று உங்கள் காரியதரிசிக்குச் சொல்லி அவளை உஷாரப்படுத்துங்கள். அப்பொழுது நான் அறையை விட்டு வெளியில் போகும்படி நேரும்"— (இன்னும் வரும்.)

---

## Heroes and Heroines.

### I. Padmini, the Heroine of Chittur.

(Originally contributed to the Vivakachintamani.)

### பத்மினி.

---

இந்தியாவின்மீது படையெடுத்து வந்தவர்களோடெல்லாம் அஞ்சாது எதிர்த்து நின்ற ஆண்சிங்கங்கள் ராஜபுத்திரர்களேயாம். அவர்களுள் உதயபுரத்தில் இந்நாளளவும் செங்கோல் கோடாமல் அரசாளுகின்ற ராணுவம்சம் மிகச் சிறந்தது. இந்தியா முழுவதையும் ஒரு குடைக்கீழாண்ட மகா மோகலாயர் மற்ற க்ஷத்திரிய ராஜாக்களின் வீட்டுப் பெண்களை மணம்புரிந்ததுபோல ராணுவின் மகளை விவாகஞ் செய்து கொள்ளும்படி தங்களா லியன்ற மட்டும் பார்த்தார்களென்ருலும் ஒன்றும் பலிக்கவில்லை. அவர்கள் தங்களை சூரியவம்சத்திலவதரித்த ராமனுடைய சந்ததியார்களென்று புராண வம்சாவளிக் கிரமமாக எடுத்துக் காட்டுகிருர்கள். ஆஜ்மீர் நாட்டிலுள்ள மலைக்கோட்டைகளுளெல்லாம் சித்தூர் பலமானது. அதன் சுற்றளவு நான்குமைலுக் கதிகமுள்ளது. அதன் கீழ் அதைச் சுற்றிலும் அழகிய ஆறு ஓடுகின்றது. அம்மலையினின்றும் ஓர் அருவி இடைவிடாது பெருகி வெகு உயரத்தினின்றும் அவ்வாற்றில் விழுகின்றது. கோட்டையின் கீழே அதன் நான்குப் பக்கங்களிலும் அம்மலையருவி பாயும் நெல்வயல்கள் சூழ்ந்திருக்கும். எத்தனை பலமான முற்றுகை போடப்பட்டாலும் வெகுகாலமளவும் உறுதியாக நின்று தாங்கத்தக்க சாதனங்களெல்லாம் அங்கேயுண்டு. அது மேலே சமனுனபூமியுடைய தாதலாலும், வேண்டிய அளவுக்கு உணவுப் பொருள்களைச் சேர்த்துவைத்துக் கொள்ளக் கூடுமாதலாலும், நல்லஜலத்துக்குக் குறைவில்லை யாதலாலும், குதிரை ராணுவம் தங்கியிருப்பதற்கேற்றது.

இந்தியாவிலுள்ள அரசர்களையெல்லாம் எளிதில் வென்றசக்கிரவர்த்தி அலாவுடீன் ஆக்பர் சித்தூர்க் கோட்டையைப் பிடிக்கவேண்டுமென்று நெடுநாளாக முயற்சிசெய்து கொண்டிருந்தான். அதையாண்ட ராணுவின் மனைவி பத்மினி மிக்க அழகுடைய வளென்றும், அவளுக் கிணையாவார் இப்புவிய லெங்குமில்லையென்றுங் கேட்டது முதற்கொண்டு அவன்

நினைவெல்லாம் அவள்மீது சென்று, எந்த விதத்தினாலாயினும் அவளைத்தன் வசப்படுத்த வேண்டுமென்று நிச்சயித்தான். அலாவுடீன் சித்தூரை முற்றுகைபோடுவதற்கு முன்னே ராணாவினிடம் தூதனுப்பி, தனக்குக் கோட்டையைப் பிடிக்கத்தான் வேண்டுமென்று அத்தனை பேராசை யில்லையென்றும், இவ்வுலகனைத்தையும் தனது புஜபல பராக்கிரமத்தால் ஒரு குடைக் கீழாளுகின்ற தனக்கு, மகாசௌந்தரியவதியாகிய பத்மினியைக் கொடுத்து விடுவனாயின் வீணே சண்டைசெய்து கோட்டையை யிழந்துபோகாம லிருக்கலா மென்றுஞ் சொல்லியனுப்பினான்.

இந்தச் செய்தியைக் கேட்டதும் பகைவன் தன்னிலும் பலமடங்கு பலமுடையவனென்றும் சிறிதுங் கலங்காமலும், பிறரோடு யோஜியாமலும் தனது ஆருயிர்க் காதலியோடு மட்டுஞ் சொல்ல, அந்தக் கற்புடைத் தேவி நெஞ்சம் புழுகி "பிராணநாதா! நீரென்னை அந்தக் கொடும்பாவியிட மனுப்புவது கூடுமோ? எவ்வளவு பலமான முற்றுகை போட்டாலும் அவனைக் கோட்டையைப்பிடித்துக் கொள்ளாமற் செய்து அவன் துர்ப்புத்திகொண்டு என்னைப் பெறவிரும்பியிருக்கிற ஆசையை அழிக்க வல்ல சாதனங்கள் இந்தச் சித்தூரில் இல்லாமலா போயின? அப்படிக்கின்றித் தீங்கக்கூடாமல் விபத்தின்மேல் விபத்துண்டாகுமாயின் விசனப்படாமல் பிராணனை விட்டுவிடுவது எனக்குப் பெரிதன்று; உமது காலத்துக்குப் பின்னிட்டு நானிருப்பது கூடாதென்ப தொன்றுமட்டுந்தான் நான் கொண்டிருக்கும் முக்கியமான கருத்து." என்று கண்ணுங் கண்ணீருமாய் நின்று சொன்னாள். உடனே அரசன் வெளியேவந்து அந்தத் தூதனோடு, "ஒற்றனே! இக்ஷுவாகு வம்சத்தின் பெருமையை யார்தானறியார்? உன் அரசனைச் சித்தூருக்குப் போகக்கூடாதென்று அவனுக்குப் புத்தி சொல்லிப்பார்; அவன் அதைக்கேளாமல் காமவெறிகொண்டு அறிவிழந்து சண்டை செய்யத்தான் வேண்டுமென்றால் என்னோடு சண்டைசெய்ய வரலாமென்றும், எனக்கு என் காதலியைக் காப்பதினுஞ் சிறந்தது மற்றொன் றில்லையென்று நான் சொன்னேனென்றும் சொன்னதாகச் சொல்லு" என்று சொல்லியனுப்பினான். அலாவுடீன் சக்கரவர்த்திக்கு அத்தனை துணிகரமாய் எவரும் உத்தரஞ் சொல்லத் துணிந்ததில்லை.

இந்தச் செய்தியைக் கேட்டது முதல் அலாவுடீன் தூக்கமின்றி அதுவே விசாரமாய், வெற்றியிற்சிறந்த பெருஞ்சேனை வெள்ளத்தோடு சித்தூருக்குச் சென்றான். அவன் அப்படி படையெடுத்து வருவானென்பதை யறிந்தே முற்றுகையைத் தாங்கும்படிவேண்டிய முயற்சிகளையெல்லாஞ் செய்திருந்தான். அன்றியும் அவன் அண்டை அரசனிடம் தூதனுப்பி ஒண்ட வந்த பிடாரி ஊர்ப்பிடாரியைத் துரத்துவதுபோல் நேற்றுவந்த மகமதியர்கள் நம்மவர்களுக்குள் ஒற்றுமையில்லாமையால் நம்மை வெற்றிகொள்ளுவது மன்றி, மதப்பேய் கொண்டாடி நம்மையுந் தங்கள் மதத்திற் சேர்த்துக்கொள்ள முயல்கிறார்களானதால் இவர்களை இன்னமும் அடக்காமல் அப்படியே விட்டிருந்தால் அதிசீக்கிரத்தில் இந்துராஜாங்க முழுவதுமே அடியோடு அற்றுவிடுமென்றான். சித்தூருக்கருகேயுள்ள ஜம்மால், தத்தாஎன்னும் நாட்டரசர் இருவர்மட்டுமொன்றுசேர்ந்து சித்தூருக்குவந்து ராணாவின்சேனையோடு சேர்ந்து அலாவுடீனோடுசண்டைசெய்ய வந்தார்கள். ஆயினும் அந்தச்சிற்றரசர்க ளிருவரும் அலாவுடீனுடைய சேனாஸமுத்திரத்தின் முன்னிற்க மாட்டாமல் தப்பியோடித் தங்கள் நாடுகளிலுள்ள அரணான கோட்டைகளிற் குள்ளேபோய்ப்புகு

ந்துகொண்டு சித்தூரின் முற்றுகை எவ்வாறுமோவென்று பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

அலாவுடீன் சித்தூருக்கு அழைத்துக்கொண்டுபோன சேனை வெள்ளத்தைப்போல ஆடம்பரமானது இந்தியாவில் என்று மிருந்ததில்லை. அவன் தனக்குள்ள விபவங்களை எல்லாம் எல்லோருங் கண்டதிசயிக்கும்படி சித்தூரைச்சுற்றிக் கண்ணுக்கெட்டிய மட்டும் கூடாரங்களை யடித்திருந்தான். எங்கே பார்த்தாலும் நால்வகைத் தானையும் ஏராளமாய் நிறைந்திருந்தன. பொன்னும் மணியும் அங்கெங்கும் பிரகாசித்தன. அவ்வாறு சென்றால் தன் பெருமையைக் கண்டு பத்மினி சந்தோஷித்துத் தன்மேல் மோகங்கொண்டு வலியத் தன்னிடம் வந்துவிடுவாளென்றும், அவள் கணவன் சேனுவெள்ளத்தைக் கண்டு நடு நடுங்கித் தானகவே சித்தூரையும், பத்மனியையும் தன்னிடம் ஒப்புவித்து விடுவானென்று மெண்ணினன். மானமே தனமாகவுடைய பெருங்குலத்திற் பிறந்த வெற்றிவேந்தனுகிய ராணு தன் கோட்டையின்மேல் நின்று அவன்செய்த ஆடம்பரத்தையெல்லாங் கண்டபோது அவன் சிறிதாயினும் அஞ்சவில்லை.

கொக்கின் தலையில் வெண்ணெயை வைத்துப் பிடிக்கப்பார்ப்பதுபோல பத்மினியை எளிதில் பெறலாமென் றெண்ணி அலாவுடீன் முதலில் அவளுக்கு ஆசைக்கடிதங்களை யெழுதி அவற்றை அம்புகளின் நுனியில் கட்டி எய்தான். பத்மினி அவற்றைக்காண கண் கூசினள். அலாவுடீன் தன் மனோரதம் நிறைவேருதென்று கண்டு பொங்கியெழுந்து, அந்தக் கோட்டையை அழித்துச் சுட்டெரிக்க எண்ணித் தன் பீரங்கிகளை யெல்லாம் நாட்டிச் சுடக் கட்டளையிட்டான். அவ்வாறு சுடப்பட்ட பீரங்கி வெடிகளின் குறி உயரச் செல்ல மாட்டாமல் வீணுயிற்று. இவ்வாறு ஆரம்பத்திலே தானே அவர்கள் பின்னடைவதைக் கண்ட ராஜபுத்திர வீரர்கள் கோட்டையினின்று கீழேநோக்கிப் பரிகாசம் பண்ணினர்கள். அதைக்கண்டு அலாவுடீனுக்கு வெட்கமும் துக்கமும் அதிகமாயிற்று. இந்த முற்றிகை பன்னிரண்டு வருஷகாலமளவும் நீடித்திருந்ததென்று சொல்லப்படினும் ஆறு வருஷத்திற்குக் குறைவில்லை.

இவ்வாருக விடாமுயற்சியோடு அலாவுடீன் முற்றுகைபோட்டும், ராஜபுத்திரர் ஒரே பிடிவாதமாகச் சௌரியம் பாராட்டி அலாவுடீன் ஆசையை யொழித்து அந்த முற்றுகையை விட்டுத் திரும்பிப் போகும்படி செய்தார்கள். அலாவுடீன் தனது பராக்கிரமத்தால் அவர்களை வெல்ல வழியில்லை யென்று நேரில்கண்டறிந்துகொண்டு தந்திரமாக ஸாம உபாயத்தை நாடினன். அலாவுடீன் ராணுவை வஞ்சித்தற் பொருட்டு, அவன் தனது சிறிய சேனையைக் கொண்டு தனது பெருஞ் சேனையோடு அவ்வளவு காலமாகச் சிறிதாயினும் அச்சமில்லாமல் கோட்டையைக் காத்தது பேராண்மையுடைத்தென்றும், அவனோடு எவ்வளவு காலந் தான் தான் சண்டை செய்யினும். போரில் அந்த மகாசூரனைத் தன்னால் வெல்ல ஒண்ணுதென்றும், தான் அந்தக்கோட்டையை விட்டு மானமிழந்து போவதற்கு முன்னே தன்மேல் தயைகூர்ந்து தனக்கு இரண்டு வரங்களை ராணு கொடுக்கவேண்டுமென்றும் வேண்டிக்கொண்டான். அவற்றுள் ஒருவரம் தான் நெடுங்காலமாக விரும்பிய பத்மினியை ஒரு தரங் கண்ணுலே தரிசித்துவிட்டுப் போதல்; மற்றென்று அத்தனை வீரியமாய்த் தன்னோடு எதிர்த்துநின்ற அற்புதமான அந்தக் கோட்டையைப் பார்த்துவிட்டுப் போதல். அதற்கு ராணு முதலாவது வேண்டுகோளுக் கிணங்கச் சம்மதியாமல் தன் கோட்டையை மட்டும் பார்த்துவிட்டுப் போவதில் தடை யொன்று மில்லை யென்றும், வேண்டுமானல் அவன் ஐம்

பது பெயரோடு வரலாமென்றும் அனுமதி கொடுத்தான். அந்த மட்டுமாவது அனுகூலமாக உத்திரவு கிடைத்ததே யென்று அவன் அதற்குங் குறைந்தவர்களோடு சித்தூரைப் பார்க்கப்போனான்.

அலாவுடீனுக்கு ராணா சித்தூரில் அரசர்க்குரிய மரியாதைகளனைத்தையுங் குறைவறச் செய்தான். இந்துக்களுக்குள்ள வழக்கத்தின்படியே அரண்மனைக்குள்ளே அலாவுடீனுக்கு விமர்சையாக விருந்து நடந்தது. இரண்டு அரசர்களும் அதிக பிரீதியாக வார்த்தை சொல்லிக்கொண்டார்கள். அலாவுடீன் வார்த்தை சொல்லுவதில் மிக்க வல்லவனாதல் பற்றி ராணா அவன் வார்த்தையைக் கேட்டு மகிழ்ந்தான். அலாவுடீன் அதுதான் நல்ல சமயமென்று அவன் பெருமையைப் புகழ்ந்து அதிகமான சிநேகம் பாராட்டி, பத்மினியை ஒரு நொடிப்பொழுது பார்த்து விட்டுப் போகும்படி கிருபைசெய்தாலும் போதுமென்று வருந்தி வேண்டிக்கொள்ள, ராணா மகாதாயாளுவாதலால் அவனை நேரில்பார்க்க இணங்காமல் பல நிலைக்கண்ணாடிகள் மூலமாக அவள் பிரதிபிம்பத்தைக் காட்டச் சம்மதித்தான். ஆனால் இப்படிச் செய்யவும் பத்மினிக்குச் சம்மதமில்லை. ஆயினும் கணவன் வார்த்தைக்கு வேறு சொல்லுவது தர்ம்மல்ல வென்று தீராப்பொறியாய் ஒன்று முன் ஒன்றாக வைத்திருந்த பல நிலைக்கண்ணாடிகளில் ஒன்றின் முன் பளிச்சென்று மின்னல்கொடிபோல எதிரே வந்து நின்றுவிட்டுப் போய்விட்டாள். காமுகனாகிய அலாவுடீன் அவள் ரூபத்தைக்கண்டது முதல் அவளே தியானமாயிருந்தான். அவன் கபடியாகையால் தனக்கு அவளிடத்திலுள்ள ஆசையை வெளியேகாட்டாமல் அடக்கிக்கொண்டு, தனக்கு மிக்க நஷ்டத்தை யுண்டு பண்ணின ஓர் கோட்டையை முற்றுகை போட்டுப் பிடித்துக்கொண்டே போக வேண்டுமென்று சொன்னான். அதுவுமன்றி, அவன் ராணாவோடு வார்த்தை சொல்லும்போது பத்மினியின்மேல் தனக்கு ஆசையில்லையென்றும், தான் அவளைப் பாராதிருந்ததற்கு முன்னே ஏதோ பிரமையிருந்ததென்று மறைத்துப்பேசினான். அவனுடைய வஞ்சனையை அறிந்துகொள்ளாமலே அவன் சொல்வதனைத்தும் யாதார்த்த மென்றே நம்பி, அவன் தனக்கென்று கொண்டு வந்திருந்தவைகளைப் பெற்றுக்கொண்டு, தானும் அவனுக்குப் பிரதி சம்மானங்கள் செய்தான். நவரத்தனங்களிழைத்த தன் உடைவாளை அலாவுடீன் ராணாவுக்குக் கொடுத்தான்; ராணா விலைபெற்ற ஆபரணங்களை அலாவுடீனுக்குக் கொடுத்தான். குறித்திருந்த காலமாயிற்று. அலாவுடீன் ராணாவிடம் விடைபெற்றுக் கொண்டு திரும்பிப் போகும்படி தன்னோடு வந்தநாற்பது பேர்களோடும் சித்தூரின் கோட்டைவாசலண்டை போனான். கள்ளவஞ்சகன் மாயவலையிலகப்பட்டு, மாரியாதைக்காகச் சிறிதுதூரம் அவனை வழிகொண்டு சென்று அனுப்பிவிட்டு வர வேண்டு மென்றெண்ணி ராணா அவனோடு குளிரவார்த்தை சொல்லிக் கொண்டேபோனான். அப்பொழுது அலாவுடீன் விட்டுப் பிரிய மனமில்லாமல் தயங்குவதுபோலப் பாவித்துப் புகழ்ந்துபேசினான். இவ்வாறே ராணா அவனோடு கோட்டைவாசல் மட்டுஞ்சென்றான். அந்தவேளையில் அவன், அலாவுடீன் மிக்க நண்பனைப்போல நடித்து தான்கையோடு இதற்கு முன்னேவேண்டுமென்று யோஜித்து கொண்டுவந்திருந்த நீளமான முத்தாரத்தை அவன் கழுத்தில்போட்டு, அவனும் அவனோடு கூடவந்திருந்த வர்களும் சங்கேதப்படியே அதைப்பற்றி யிழுத்து எல்லோருமாக ராணாவைக் கோட்டையைவிட்டு வெளியே இழுத்துத் தள்ளிக்கொண்டு போவதைக்கண்டு கோட்டையின் மேலிருந்தவர்கள் திடுக்கிட்டு அவர்

கள்மேல் துப்பாக்கிவெடிதீர்த்தார்கள். ஆயினும் அவன் இமைப்பொழுதிற்குள்ளே குதிரையின் மேலேற்றப்பட்டு மோகல் சேனையின் கூடாரத்துக்குக் கொண்டுபோகப் பட்டான்.

இருந்தாற் போலிருந்து கோட்டைவாசலில் நடந்த அமளியைக்கேட்டு சித்தூரெல்லாம் அல்லோல கல்லோலப்பட்டது. பகைவர் சித்தூரைக் கைப்பற்றிக் கொண்டார்களென்று எல்லோரும் அஞ்சினார்கள் இந்த வேளையில் சத்துருக்கள் ஒரே மண்டாய்க் கோட்டையிற் புகுந்து அதைப் பிடித்துக் கொண்டாலுங் கொண்டிருக்கலாம். பகைவர் கோட்டைக்குள்ளே புகுந்தார்களென்றும், மகாராஜாவைக் காணுமென்றும் பத்மினியிடஞ் சென்று முறையிட்டார்கள். அவள் தானென்றுமெதிர்பாராத அந்தப்பிரமாதத்தைக் கேட்டவளவில் சற்றும் மனஞ்சோராமல் குதிரைமேலேறிக் கையிலே வேலாயுதந்தரித்துச் சேனைக்குமுன்னே சென்று, ஒன்று வெற்றிகொள்ளுகிறது, அன்றேல்போரில் மடிகிறது என்று உறுதி செய்துகொண்டு யுத்தஞ்செய்யப் புறப்பட்டாள். அவள் அந்தக்கோட்டை வாசலண்டை செல்லும் போதுதான், அலாவுடீன் செய்த மோசத்தினால் தன் கணவன் சிறைப்பட்ட செய்தியைக்கேட்டாள். அவன் பிடிபட்டுச் சிறையானதற்குத் தான் காரணமானதை நினைக்க நினைக்க அவளுக்கு ஆற்றவொண்ணாத துக்கமுண்டாயிற்று. அஞ்சாமையைத் தனக்குத் துணையாகக் கொண்டு துக்கத்தைப் பாராட்டாமல் மனவலிமை கொண்டு வீராவேசத்தினால் "அவர் சுவர்க்கமடைந்தார்? நான் அவரிடத்தில் வைத்திருந்த பாழும் ஆசையே என் பிராணநாதனைக் கொன்று விட்டது: மானக்கேடான உடன்படிக்கை செய்துகொண்டு அவரைச் சிறைமீட்பதைவிடப் பிராணன் போகிறமட்டும் பகைவரோடு போர்புரிவதுதான் நமது மரபிற்கேற்ற தர்மம்" என்று சொல்லிக் கண்ணீர் பெருக்காமல் கோட்டையின் அலங்கத்தின்மேல் தன் சேனைக்குத் தலைவியாய் அச்சேனையை நடத்தி சண்டை செய்ய வாரம்பித்தாள். அழகில் அவளுக்கிணையாவர் ஒருவருமில்லாதிருந்த வண்ணமே போரிலும் அவளை வெல்வார் ஒருவருமில்லை.

அலாவுடீன் ராணாவைப் பிடித்துக்கொண்டபின் இந்தக் கோட்டை நாதனற்றதாய்விடுமென்றும், பின்பு தான் அதை எளிதில் கைப்பற்றலாமென்றும் எண்ணி, அந்தக் கோட்டையிலுள்ளவர்கள் அதையும், அதிலுள்ள பத்மினியையும் ஒப்புவிக்காவிடில் அதிலுள்ளவர்களையெல்லாம் பிடித்து இவர்களுக்குச் சிரஸாக்கினை விதிக்கப்படுமென்றும், அவ்வூர் கொளுத்தப்பட்டுச் சாம்பலாக்கப் படுமென்றும், அவர்களுள் ராணாவின் தலைதான் முதலில் வெட்டப்படுமென்றும் அறிவித்தான். அச்செய்தி அந்த வீரபத்னி செவியிற்பட அவள் அஞ்சாமல் ஆண் சிங்கம்போல் நின்று, அப்படிப்பட்ட மோசக்காரன் கையில் தன் பர்த்தா எப்பொழுது அகப்பட்டாரோ அது முதற்கொண்டே அவரைத்தான் இழந்து விட்டதாயும், அவரைப் பிடித்த கொடும்பாவிகளைப் போரில் வெல்ல வல்ல அதிசூரர்கள் தன் கோட்டையில் இன்னும் அநேகருண்டென்றும், தனக்குக் கடவுள் அளித்திருக்கும் வலிமையைக்கொண்டு தன் கணவனுரிட மிருந்ததிலும் பெரிதான படையை நடத்தி மோகலாயரோடு போர் புரியச் சித்தமா யிருப்பதாயும் அவனுக்கு உத்தர மனுப்பினாள். அவளிடமிருந்த போர்த் தலைவர்களத்தனைபேரும் தங்கள் பிராணன் போகிறமட்டும் போர்புரிகிறதே யல்லாமல் கோட்டையை ஒப்புவிக்க மாட்டோமென்று ஒரு முகமாய்ச் சொன்னார்கள்.

காயம்பட்ட புலிகள் போல, ராஜ புத்திரர்களுக்கு வீராவேசம் வந்துவிட்டால் தங்கள்

பிராணனைத் துரும்பாக நினைத்து அகோர யுத்தஞ் செய்வார்களென்பது அலாவுடீன் அறியாததன்று. ஆதலினால் அவன் சாமோபாயத்தினால் மட்டுந்தான் அவர்களை வெல்லக் கூடுமென்றும் அப்படிச் செய்வதற்கு அந்த முற்றுகையைப் பலப்படுத்த வேண்டுமென்றுந் தீர்மானித்தான். அலாவுடீன் விலையில்லா மாணிக்கங்களா லிழைக்கப்பட்ட ஆபரணங்களையும், பொன்னுடையையும், அவற்றோடு தனக்கு அவள்மேலுள்ள ஆசையை விளக்கிக்காட்டி யெழுதிய பத்திரிகைகளையும் தூதன் வழியாக அவளிட மனுப்பினான். உத்தம ஸ்திரீகள் தங்கள் கணவனிடத்துச் செய்யவேண்டியவற்றுள் பத்மினி ஒன்றாலுங் குறையின்றி ராணாவுக்குச் செய்ததைக்கண்டு தனக்கு மிக்க சந்தோஷ முண்டாயிற்றென்றும், பதிவிருதையானவர்கள் தம் கணவரை மீட்டற்பொருட்டு என்ன செய்தாலுங் குற்றமுடைத்தாகா தென்றும், சக்ரவர்த்தியாகிய தன்னை மணந்துகொள்வதனால் அவள் மண்டலேசுவரியாய் மகிமை பெற்று வாழலாமென்றும், செய்தி யனுப்பினான். தான் அவ்வாறு சொல்லியதை அவள் நம்பும்படியாக அதற்கு ராணாவும் இணங்கியிருப்பதாக அவனிடமிருந்து கடிதங்களையும் அனுப்பினான். அவள்பர்த்தாவை நிர்ப்பந்தித்து அவன் அவ்வாறு கடிதங்களை யெழுதச்சொல்லி வாங்கியனுப்பியதே யல்லாது அவர் மனதார எழுதியதல்லவே யல்லவென்று கண்டுகொண்டு எந்த உபாயத்தினாலாயினும் தன் பர்த்தாவைத் தன்னிடங் கொண்டுவந்து சேர்க்க வேணுமென்றதைக் குறியாகக் கொண்டாள். கபடவேஷம் பூண்டு தன் கணவனைச் சிறைக்கொண்டு போன மகாபாதகனுக்கு என்னசெய்தாலுந் தோஷமில்லை யென்று துணிந்து அவன் செய்ததுபோலவே தானுஞ் செய்வதுதான் உபாயமென்று தீர்மானித்தாள். ஆதலினால் இவள் தான் எண்ணியிருந்த எண்ணத்தை யெல்லாம் மாற்றிவிட்டதாயும், இந்த ஜன்மத்தில் மீண்டும் ராணாவோடு சேர்ந்திருக்க வழி தனக்கில்லையென்பது நிச்சயமாயிற்றென்றும், தான் தன் தெய்வத்துக்கு முன்னே ராணாவைத் தவிர்த்து அவர் நேரில் வாயினாற் சொன்னாலல்லாமல் வேறு புருஷனை விரும்புகிறதில்லையென்று அவருக்குப் பிரமாணஞ் செய்து கொடுத்திராத பக்ஷத்தில் தான் மோகல் சக்ரவர்த்திக்கு வாழ்க்கைப்பட்டுப் பட்டத்தரசியாய்ச் சுகமாக வாழ்ந்திருக்கத் தடையிராதென்றும், இது விஷயத்தில் தான் ராணாவின் அநுமதியைப் பெறவேண்டியது அவசியமானதால் அலாவுடீன் சக்ரவர்த்தியின் இஷ்டப்பிரகாரம் ராணாவைத் தன்னைப் பார்க்கும்படி சித்தூருக்கு அனுப்பினாலும், அல்லது தன்னைத் தன் புருஷன் சிறையிருக்கு மிடத்திற்கு அனுப்பினாலும் அவர் அநுமதி பெற்று இருவருஞ் சுகித்து வாழலாமென்றும் சொல்லி யனுப்பினாள். அலாவுடீன் இந்தச் செய்தியைக் கேட்டுப் பேரானந்தங்கொண்டு பத்மினி ராணாவை வந்து பார்ப்பதில் ஆக்ஷேபமொன்று மில்லையென்றும், அவ்வாறு வரும்போது தனக்கு வேண்டியவர்களை வழித்துணையாக அழைத்து வரலாமென்றுஞ் சொல்லியனுப்பினான்.

ஆக்ராவுக் கருகேயுள்ள ஓர் 'மலைக்கோட்டையில் ராணா வைக்கப்பட்டிருந்தான். பத்மினியின் பொருட்டு எவ்வளவோ பொருளையிழந்து, இராப்பகல் தூக்கமில்லாமல் முற்றுகை போட்டு அதைப் பிடிக்கமாட்டாமல் மானமிழந்து அலாவுடீன் அவள் தனக்கு எளிதில் வாய்ப்பதைக் கண்டு தன்னுள்ளே மகிழ்ந்து அவள் வரவை எதிர்பார்த்து நின்றான். அவளைச் சீக்கிரம் தன் அரண்மனைக்குள்ளே வரவழைக்க வேண்டுமென்று அவன் பட்டபாட்டிற்களவில்லை. உடனே அவள் பிரயாணப்படவேண்டுமென்று உடனுக்குடன் ஆட்களை அனுப்பிக்கொண்டிருந்தான். ஒவ்வொரு நாளும் அவளுக்கு விலைபெற்ற ஆபரணங்களை

அனுப்பினான். அவளுக்கென்று தன் தோட்டத்திலிருந்து மதுரமான கனிகளை அனுப்புவான். தான் அவள்மேல் வைத்திருக்கும் வாஞ்ஞசையைக் காட்டும்படியாக விதம் விதமான பரிமள மலர்களால் செண்டுகளைக்கட்டி யனுப்புவான். பத்மினி பயணத்துக்கு வேண்டிய சிவிகை முதலியவற்றைச் சித்தப்படுத்தி வைத்திருந்தாள். அரயர்களேறும் பல்லக்குகள் சிறிதாயும், ராணிளேறும் மூடு பல்லக்குகள் தாராளமாக நான்கு அல்லது ஐந்துபேர் ஏறிச்செல்லும்படி பெரிதாயுமிருப்பது வழக்கம். அந்தப் பல்லக்கைச் சிறிது வேளைகளில் இருபது ஆட்கள் சேர்ந்து சுமப்பது முண்டு. பத்மினி அவ்வாறான பல்லக்கு இரண்டையும் தன் அரண்மனைக்குள்ளே கொண்டுவரச் சொல்லி சித்தூரிலுள்ள சூரர்களுக்குள் ளெல்லாஞ் சூரர்களான எட்டு ஆண் சிங்கங்களைத் தேர்ந்தெடுத்து ஒவ்வொன்றிலும் நான்கு பேர்களை உட்கார்த்தி, அவர்களோடு இந்த உண்மை ஒருவர்க்காவது தெரியாதிருக்கும்படி வைத்திருக்க வேண்டுமென்றும் வழியில் யார்வந்து என்னசொன்னாலும் வாயைத் திறக்கப்படாதென்றும் கண்டிப்பான கட்டுப்பாடு செய்திருந்தாள். இது ஒருத்தருக்காவது தெரியாமல் பரமரகசியமாக வைக்கப்பட்டிருந்தபடியால் சித்தூரிலுள்ளவர் தங்கள் பட்டத்தரசி ஆக்ராவுக்குப் பயணப்பட்டாளென்றெண்ணி அந்தப் பல்லக்குகள் வீதியொடு செல்லுவதைக்கண்டு அந்தப் பட்டணமுழுதும் கண்ணீர்விட்டுக் கதறியழுததை பத்மினி தன் அரண்மனையிலிருந்தபடியே ஏகாந்தமாய் ஒளிந்திருந்து தன்னிடத்தில் ஜனங்களுக்கு அத்தனை விசுவாசமிருப்பதைக் கண்டு உளம் பூரித்தாள்.

பத்மினி தன்னிடமிருந்த பேடிகளில் ஒருவனைத் தன்னைப்போல நடித்துப் பேசும்படியாகவும், கேட்டதற்கு மட்டும் மெல்ல உத்தரஞ் சொல்லும்படியாகவுங் கற்பித்து அதை வீரர்களேறிச்சென்ற சிவிகையொன்றில் ஏற்றியிருந்ததனால் வெளியேயிருந்தவர்க ளெல்லாரும் அந்த அண்ணகனைப் பத்மினி சொல்லுவது போல், வழியில் யாராவது தன்னைத் தடை செய்தாலும், அல்லது ஆக்ராவின் வழியாக வில்லாமல் நேரே தன் கணவனிருக்குங் கோட்டைக்குச் செல்ல வொட்டாவிட்டாலும், தன் கணவனோடு தான் வார்த்தை சொல்லும்போது எவராவது அங்கே வந்தாராயினும், தான் அதற்கென்றே தன்னோடு கொண்டுவந்திருக்கின்ற கூரிய கத்தியினால் குத்திக்கொண்டு தன் பிராணனை விடுவது திண்ணமென்றும் கண்டிப்பாய் அலாவுடீனுக்கு எழுதி யனுப்பினாள். ஆதலினால் அலாவுடீன் அவள் இஷ்டத்திற்கு விரோதமாக வழியில் யாரும் அவளை யொன்றுஞ் செய்யக்கூடாதென்று கட்டளையிட்டு, ராணாவை அவள் நேரில் கண்டு வார்த்தை சொல்லிவிட்டு அவனிடத்தினின்றும் கடைசியாக விடைபெற்றுக் கொண்டு தன்னிடம் வருவதில் தனக்கு யாதுந் தடையில்லையென்று சொல்லியனுப்பினான்.

பத்மினியின் பல்லக்குகளும் பரிவாரமும் பட்டணத்தைக் கிட்ட கிட்ட அலாவுடீன் அவளுக்குக் கடிதங்களை யெழுதி யனுப்பிய வண்ணமாயிருந்தான். வழியில் ஊர்தோறும் அவனிடமிருந்து கடிதங்களை வைத்துக்கொண்டு சேவகர் காத்திருந்தார்கள். அவன் அந்தக் கடிதங்கள் ஒவ்வொன்றுக்கும் விடாமல் உத்தரமெழுதிக்கொண்டே வந்தாள். ஆக்ராவுக்குக் காதவழிக்கப்பால் அலாவுடீன் பத்மினியை உபசரித்துக் கோலாகலத்தோடு தன் அரண்மனைக்கு அழைத்து வருவதற்கென்று போர் யானைகளும் ஒட்டகங்களும் மெய்க்காப்பாளரு மடங்கிய தனது பரிவாரங்களை அனுப்பியிருந்ததை பத்மினியின் பரிவாரங் கண்டது. அதை நடத்திய அண்ணகன் அங்கிருந்து காதவழி தூரத்தில் ராணா சிறைவைக்கப்பட்டிருந்த கோட்டைக்கு அந்தி நேரத்திற்

சென்றான். பத்மினி ராணாவைக் கண்டு வர்த்தை சொல்லியானதும் சித்தூரிலிருந்து அவரோடுவந்த பரிவாரமெல்லாம் அப்படியே ராணாவைச் சித்தூருக் கழைத்துக்கொண்டுபோக வேண்டுமென்றும், தான் அனுப்பிய தன் பரிவாரம் பத்மினியைத் தன் அரண்மனைக்கு அழைத்துக்கொண்டு வரவேண்டுமென்றும் அலாவுடீன் கட்டளையிட்டிருந்தான்.

அவ்விரண்டு பல்லக்குகளையும், அவற்றின் கூடவந்த பரிவாரங்களிற் சிலரையுமட்டுமே கோட்டைக்குள்ளே விட்டார்கள். அந்தக் கோட்டையின் அதிகாரி அவனைக் காணுதற் பொருட்டு எதிர்கொண்டுவர பல்லக்கிற்குள்ளிருந்த சூரர்கள் தங்கள் உடைக்குள்ளே ஒளித்துவைத்திருந்த ஆயுதங்களை யணிந்து திடீரென்று வெளிக்கிளம்பி அவனைக் கொன்று அங்கிருந்த சிறு சேனையை மலைத்தோடவடித்துத் தங்களோடு வந்த பரிவாரத்தோடு அந்தக் கோட்டையிலிருந்த ராணாவை விடுவித்து கணப்பொழுதில் அவனை வெளியே அழைத்துக்கொண்டு வந்தார்கள். அவன் அவ்வாறு வெளியே வந்தமாத்திரத்தில் அவன் தன் குதிரைமேலேறித் தன் பரிவாரங்கள் தன்னைப் புடைசூழ சித்தூரைநோக்கி அதிவேகமாகச் சென்றான். (இன்னும் வரும்.)

---

## Science Stories.

### I. Will O' the Wisp.

(Originally contributed to the Vivekachintamani.)

### கொள்ளிவாய்ப்பிசாசு.

---

ஓர் கதை

திருநெல்வேலி ஜில்லாவில் தாம்பிரபர்ணி நதிக்கரையில் வீரமாத்தூர் என்று ஒரு கிராமம் இருக்கிறது. ஆற்றுக்கு இரு புறமும் ஊர். ஊருக்கு மேற்கே ஒரு பாலம் போடப்பட்டிருக்கிறது. பாலத்துக்கு மேற்கே நாணலும் கோரையும் அடர்ந்த சதுப்புகள் நதிக்கு இரு கரையிலும் இருக்கின்றன. அந்தச் சதுப்புக்களில் கொள்ளிவாய்ப்பிசாசு தட்டுப்படுவதாயும், தட்டுப்பட்டால் ஊரில் எதாவது கொலை விழுமென்றும் ஒருவதந்தி.

அந்தஊரில் சேஷய்யர் என்றொரு ஸப் டிவிஷன் ஜமீன்தார். அவர் ஓர் பெரிய லக்ஷாதிபதி. அவர் ஆற்றிற்குத் தென்கரையில் 'பங்களா' கட்டிக்கொண்டுவசித்துவந்தார். அவருக்கு வைத்தியநாதய்யரென்றொரு புத்திரர். அவர் பட்டணத்தில் வாசித்து பி. ஏ. பட்டம்பெற்றவர். அவருக்கும் ஆற்றுக்கு வடகரையில் வசித்துவந்த எழுத்துவாசனைகூட அறியாத சுப்பிரமணியனுக்கும் பாலிய சிநேகம். சுப்பிரமணியனை இவர் படிக்காதவனென்று அடிக்கடி பரிகாசம் செய்வார். இருந்தாலும் சுப்பிரமணியன் காதில் எதுபட்டாலும் உடனே ஓட்டமாய் ஓடிவந்து அதை வைத்தியநாதய்யருக்குச் சொல்லாவிட்டால் அவனுக்கு இராத்திரி தூக்கம்வராது. அவ்வாறு ஒருநாள் யாரோ ஒருவன் கொள்ளிவாய்ப்பிசாசு கண்டதாக அவன் கேள்விப்பட்டதால் மேல் மூச்சு கீழ்மூச்சு வாங்க வைத்தியநாதய்யரிடம் ஓடிவந்து "வைத்தி, வைத்தி, சமாசாரம் கேட்டாயோ ? மேலையாத்துச் சுப்பன் நேற்று கைலாசபுரத்திலிருந்து வரும்போது ராத்திரி எட்டுமணிக்கு கொள்ளிவாய்ப்பிசாசைப் பார்த்தானாம், பயத்தினால் ஜ்வரத்துடன் படுத்துக்கொண்டிருக்கிறான்" என்றான். (ஜ்வரம் என்பது இவனுடைய கற்பனை. பார்த்தானென்று கேள்விப்பட்டான், ஜ்வரமாகவிருக்கவேண்டுமென்று நம்பிவிட்டான்.) அப்போது வைத்தியநாதய்யர் இரண்டாம் மாடியில் ஓர் அறையில் 'சோபா' வில் சாய்ந்துகொண்டு 'பேபர்' (பத்திரிகை) வாசித்துக்கொண்டிருந்தார். சுப்பிரமணியன் மூச்சுவிடாமல் சொன்னதைக்கேட்டு தலையை நிமிர்ந்துபார்த்து "ஓ ! ஆனேரேபில் மணியய்யாவாள், வாருங்கள். உட்காருங்கள்" என்று சொல்லி எழுந்திருப்பவர்போல் நடித்து "கொள்ளியாவது, பிசாசாவது ! சுப்பன் கொழுக்கட்டை தின்னான் என்று யாராவது சொல்லியிருப்பார்கள். நீ அதை அரைகுறையாய் காதில் வாங்கிக்கொண்டு பயத்தினால் உளறியடித்துக்கொண்டு வந்தாயாக்கும்" என்றார்.

சுப்பிரமணியன்:—"சுப்பன் ஜ்வரத்தால் படாதபாடுபடுவதை நான் கண்ணால் கண்டேன். (இப்படி சொன்னால்தான் தான் சொல்வது பலப்படுமென்று ஒரு சிறிய பொய்சொன்னான்.) நான் படியாதவனா

ஞல் நான் சொல்வதெல்லாம் பொய்தான்!" என்று சற்று வருத்தமுடன் சொல்ல,

வைத்தியனுதய்யர்:—"அதற்குச் சொல்லவில்லையடா, அப்பா. நான் எத்தனையோதடவை அந்தப் பக்கத்தில் போயிருக்கிறேன். என் கண்ணுக்கு ஒரு நாளும் அது தட்டுப்படவில்லையே!" என்ருர்.

சுப்:—"உன் பி. ஏ. பட்டத்தைக் கண்டு அது பயப்படுகிறதுபோலும். இருந்தாலும் இன்றைக்கு ராத்திரி அது தட்டுப்படலாம். நீயும் அங்கே 9-மணிக்கு வா, நானும் வருகிறேன்." என்று சொல்லிவிட்டு வீடுமுகமாகப் போகையில் "இந்தப்பயல் படித்துவிட்டதாக வெகு கர்வமடைந்திருக்கிருன். எப்படியாவது இவனை மட்டம் தட்டவேண்டுமே, என்ன செய்யலாம்?" என்று யோசித்துக்கொண்டு போகும்போது ஒரு யோசனை தட்டுப்பட்டது; அதை நினைத்து ஆனந்தத்துடன் குதித்துக்கொண்டு போகையில் அவனுடைய தம்பி ராமன் ஒரு எலியை வாலால் கையில் பிடித்துக்கொண்டு ஓடிவரக் கண்டான். "ஏதடா எலி" என்ன, "அதுதான் அண்ணு அதிசயம். நான் இந்தஎலி தன்வளைக்குள் நுழையும்போது பார்த்தேன். அதன் வளைக்குமுன் ஒரு ஸ்தம்பம்போல் அசையாமல் நின்ருல் அது கப்பம் என்று எண்ணி பயமில்லாமல் கிட்டவரும். வந்தால் அடித்துவிடலாமென்று ஒரு கல்லையும் கையில் வைத்துக்கொண்டு நின்றேன். அப்படியே எலியும்வந்தது. வந்ததும் ஒரே அடி: வேலைதீர்ந்தது." என்று சொல்லிக்கொண்டே ஏதோ அரிய மகாவித்தை செய்து விட்டதாக எண்ணிக்கொண்டு ஒரு தடவை எழும்பிக்குதித்தான். சுப்பிரமணியனும், "பலே! ராமா" என்று தட்டிக்கொடுத்துவிட்டு "இங்கே வா, ஒரு வேடிக்கை செய்வோம். அந்தப்பயல் வைத்தியனுதனுக்கு தலைகழுத்தில் நிற்கவில்லை"—என்னு முன் ராமன் "இப்பொழுதாவது தெரிந்ததா. நான் அன்றுமுதல் சொல்லிக்கொண்டு வந்தேனே" என்ருன். சுப்பிரமணியன் "அது இருக்கட்டும். நான் சொல்வதைக்கேள்: வைத்தியனுதன் கொள்ளிவாய்ப் பிசாசாவது ஒன்ருவது என்கிருன். அதற்காக நான் இன்று ஒரு உபாயம் செய்யப்போகிறேன். ராத்திரி ஒரு நீண்ட மூங்கில் கொம்பில் நீ ஒருலாந்தலைக்கட்டித் தொங்கவிட்டுக்கொண்டு ஆற்றங்கரை நாணல்கள் ஓரமாய் வீசி ஆட்டிக்கொண்டே இங்கும் அங்கும் ஓடிக்கொண்டிரு. நான் போய் வைத்தியநாதனைக் கூட்டிக்கொண்டு வருகிறேன். வந்ததும் லாந்தலைப் பார்த்தவுடனே நான் வெகு பயப்பட்டவன்போல ஓட ஆரம்பிக்கிறேன். அந்தப் பையனும் கூட விலுவிலுத்துப்போய் ஓடாவிட்டால் என்கையை அறுத்துக்கொள்கிறேன்." என்ருன். ராமன் "பேஷ், பெஷ்" என்று குதித்துக்கொண்டு கூத்தாடினுன். உடனே இருவரும் தக்க ஏற்பாடுசெய்ய அவர்கள் வீட்டைநோக்கிச் சென்ருர்கள்.

இது இவ்வாறிருக்க வைத்தியனுதய்யர் இந்த சுப்பிரமணியன் மூடனுகை இருக்கிருன். அவனை இன்று நன்ருகப் பயமுறுத்திவிடவேண்டு மென்று எண்ணி ஓர் உபாயம் செய்தார். இங்கிலீஷ் மருந்துகள் விற்கும் கடைகளின் வாயிலுக்கு இருபுரத்திலும் தகதகவென்று குடத்தில் தழலைப் பெய்துவைத்தாற் போல பிரகாசித்துக்கொண்டிருக்கும் இரண்டு கண்ணுடிக்குடங்கள் வைத்திருக்கப் பார்க்கலாம், அப்படி பிரகாசமாக இருப்பது 'அயோடின் என்று' சொல்லும் ஒரு திராவகம். அது வெகு காந்தியுடையது. வைத்தியனுதய்யர் அதை வாங்கிக் கொண்டுவந்து இந்தப்புறம் அந்தப்புறம் காண்பிக்கும்படி மெல்லிதான ஆட்டுத்தோலால் ஒரு பெரிய பை தைத்து அதில் இந்த 'அயோடின்' திராவகத்தை நிறையப் பெய்து வாயைத்தைத்து அதன்மேலே வரலக்ஷ்மி விரதத்துக்குச் சொம்பின்மேல் கண் மூக்கு முதலியவை கீறிவைப்பதுபோலக் கீறிவைத்து அதின்பின் ஒருவிளக்கை யேற்றி வைத்துவிட்டு தன் அறைக் கதவை மூடிக்கொண்டு தன் நண்பனுன சீனிவாசனைக் 'கூட்டிக்கொண்டு வரவேண்டுமென்று பேசினுர். அப்பொழுது சுமார் $6\frac{1}{2}$ மணி யிருக்கு மாகையால் அறையில் விளக்கு ஏற்றிவைக்க வேண்டுமென்று வேலைக்காரி கதவைத் திறக்கவே பளீரென்று அந்த பிம்பம் கண்ணில்பட, கதவைப் படீரென்று அடைத்துவிட்டு, பிசாசு, பிசாசுஎன்று கத்திக்கொண்டு வேலைக்காரி ஓடினுள். ஓடினவளை வைத்தியனுதய்யர் தாயார்கண்டு 'என்ன! என்ன!' வென்றுகேட்க, 'பிசாசு' பிசாசு' என்று வேலைக்காரி சொல்ல, பிசாசாவது, இன்னென்ருவது, எங்கடீ பார்ப்போம், என்னுடன் வா' என்ன, வேலைக்காரி 'நான் வரமாட்டேன்; எனக்கு பயமாயிருக்கிறது. சின்ன எஜமான் அறையிலிக்கிறது' என்று சொல்லிவிட்டு மடமட

வென்று கீழே ஓடிவிட்டாள். எஜமானி வைத்தியநாதய்யர் அறைக்கிட்டப்போய்க் சதவைத் திறந்தவுடன் மூக்குமுழியுமாய் ஒருஜோதி கண்ணிற்படவே கொள்ளிவாய்ப் பிசாசுதான் வந்து விட்டதென்று வெருண்டு, எங்கே கூட ஓடிவந்துவிடுமோவென்று கதவை அடைத்துக்கொண்டு திரும்பிக் கூடப் பாராமல் ஓடித் தன்னறைக்குள் அடைத்துக்கொண்டுவிட்டாள். சீனிவாசனைக் கூப்பிடப்போன வைத்தியநாதய்யர் வரும்போது வீடுமுழுமையும் பேய், பேய், என்பவரும். தீ, தீ, என்பவரும் கள்ளன், கள்ளன் என்பவருமாய், வேலைக்காரர்கள் கத்துவது, என்னவென்று அறியாமல் இங்குமங்குமாய் ஓடிக்கொண்டிருப்பதைக் கண்டு 'ஒகோ நாம்செய்த உபாயந்தான் இவ்வளவு அல்லோல கல்லோலத்திற்குக் காரணம்; ஆகவே உபாயம் நல்லதுதான்' என்று மனதுக்குள் சந்தோஷப்பட்டுக்கொண்டு உள்ளேபோனார். போகிற வழியில் தன் தாயார் அறைக்கதவைத் தட்ட அவள் "அய்யய்யோ, பிசாசு இங்கும் வந்துவிட்டதே" என்று கூக்குரலிடுவதைக் கேட்டு மூன்றுதடவை *தன் குரலைக்காட்டி அவளைத் திடப்படுத்தித் தன் அறைக்குள் கூட்டிக்கொண்டு போய் சூக்ஷமத்தை அவளுக்கு விளக்கினார். உடனே எல்லாரும் குலுங்கக்குலுங்க நகைத்தார்கள். வீட்டில் இவ்வளவு அமர்க்களப்பட்டு ஓய்ந்தபின் ஒரு நீண்டமூங்கிற்கழி நுனியில் அந்த பிம்பத்தைக்கட்டி அதின்பின் ரயில்வே ஸ்டேஷனில் உபயோகிக்கும் உருண்டையான லாந்தல்களில் ஒன்றையும் கட்டிமூடி எடுத்துக்கொண்டு, 'நிலவு நன்றாக இருக்கிறது. சுப்பிரமணியனைப் பார்த்துவிட்டு வருகிறே'னென்று சொல்லிவிட்டு வீட்டுக்கு வெளியேவந்தார். பாலத்துக்குக் கிட்டவந்தவுடன் நான்போய் நாணல்களின் மத்தியில் இதை வீசிக்கொண்டிருக்கிறேன், நீ சுப்பிரமணியனைக் கூட்டிக்கொண்டு வாவென்று சீனிவாசனை அனுப்பிவிட்டு சதுப்பு ஓரமாக வெகு உல்லாசமாக கிறுகிறென்று வீசிக்கொண்டுபோனார். அந்த சமயத்தில் ராமனும் சுப்பிரமணியனுமாக ஆற்றங் கரைக்கு வந்து, ராமனை லாந்தலை ஆட்டிக் கொண்டிருக்கும்படி சொல்லிவிட்டு சுப்பிரமணியன் வைத்தியநாதய்யரை அழைத்துவரப் பாலத்தை நோக்கிப்போனான். போகும்போதே "அகப்பட்டுக்கொண்டான் தக்கடி அகப்பட்டுக்கொண்டான்," என்று வைத்தியநாதய்யர் பயப்படப்போகிறதை மனதில் நினைத்து ஆனந்தத்துடன் குதித்துக்கொண்டு போனான். பாலத்தின் கிட்டவந்ததும் வைத்தியநாதய்யர் சுற்றிக்கொண்டிருந்த பிம்பம் பளீரென்று தட்டுப்படவே, 'இது ஏதோ ஒரு உருவம் மூக்கும் முழியுமாய் வெகு பிரகாசத்துடன் நாணல்களின் மத்தியில் இங்கும் அங்குமாய் ஓடிக்கொண்டிருக்கிறதே. இதுதான் நேற்று சுப்பன் பயந்துகொண்டு பார்த்த கொள்ளிவாய்ப்பிசாசு போலிருக்கிறதென்று எண்ணி மார்பு படபடவென்று அடிக்க உடல் நடுங்கிக்கொண்டு வீட்டைநோக்கி ஓட எத்தனித்தான். இதற்குள் இராமனுடைய லாந்தல் வெளிச்சமானது நாணல்களின் மத்தியில் சக்கிரவாணம்போலச் சுழன்றுகொண்டு ஓடிக்கொண்டிருப்பதை வைத்தியநாதய்யர் பார்த்து கொள்ளிவாய்ப் பிசாசுதானோ என்று திடுக்கிட்டுப் பார்த்து, இல்லையென்று மனதைத் திடம்பண்ணிக்கொண்டு சற்று தூரம் போகையில், 'லாந்தர்' இன்னும் வெகுவிரைவாய் ஆடுவதைப்பார்த்து வெருண்டு, வியர்த்து, விலுவிலுத்து வீட்டைநோக்கி ஓடத்தலைப்பட்டார். படித்தவன் என்ற தைரியமெல்லாம் போய்விட்டது. வீடுபோய்ச் சேர்ந்தால் போதுமென்று ஆயிற்று. வைத்தியநாதய்யர் இந்த அவஸ்தையில் ஓட இவர் கையிலிருந்த பிம்பமானது வெகு விரைவாய் ஓடுவதை ராமன் கண்டு "ஒகோ விளையாட்டு வினையாய் முடிந்ததே, புலி புலியென்று கூவிய பையன் கதைபோலாயிற்றே" என்று எண்ணிக்கொண்டு உயிருக்குத் தப்பவேண்டுமே என்று தட்டுக்கெட்டு ஓடினான். இவர் இப்படி ஓடவே ஸ்ரீனிவாசன், அவனுடைய 'லாந்தல்' ஓடுவதைக்கண்டு "ஐயய்யோ கொள்ளிவாய்ப் பிசாசு, கொள்ளிவாய்ப்பிசாசு" என்று கதறிக்கொண்டு சேஷய்யர் பங்களாவைநோக்கி ஓடி அப்பொது தான் டிவிட்டிக்காரர்கள் முன்னே ஓடிவர திருநெல்வேலியிலிருந்து குதிரைவண்டியில் வந்திறங்கின சேஷய்யரிடம் வெகு அவசரமாய் சங்கதியைச்சொல்ல அவர் அப்படியே வண்டியைத் திருப்பிக்கொண்டு வந்தார். அதற்குள் மணி பத்தாய் விட்டது. அன்று ஐந்தாம் பிறைச் சந்திரனாகையால் சந்திரனும் அஸ்தமனமாய் எங்கும் இருள் அந்தகாரமாய்ச் சூழ்ந்துகொண்டுவிட்டது. ராமன் வழிதெரியாமல் சேற்றில் இடுப்புவரை அழுந்திவிட்டான். வைத்தியநாதய்யரும் வழிதவறிப்போய் நாணலிலும் முள்ளிலும் உடம்பு கிழிபட்டு ஒரு புதரில்போய் சிக்கிக்கொண்டுவிட்டார். சேஷய்யர் வந்ததும் சீனிவாசனை

* மனித உரு எடுத்துக்கொண்டு வரும்பிசாசு இரண்டு தடவைக்குமேல் கூப்பிடாது என்பது வழக்கம்.

வண்டிமேலேற்றி குதிரையை அமர்த்திக்கொண்டிருக்கச் சொல்லி விட்டுத் தீவிட்டிக்காரர்களுடன் வைத்தியனுதய்யரைத் தேடப்போனார். அந்த சமயத்தில் சேற்றிலகப்பட்டுக்கொண்ட ராமன் தன் கையிலிருந்த லாந்தலை இதினல்தானே இவ்வளவு சங்கடமும் வந்ததென்று ஆற்றில் சுழற்றி எறிவதை வண்டியில் உடல் நடுங்கிக்கொண்டு உட்கார்ந்திருந்த ஸ்ரீனிவாசன் பார்த்து "ஒகோ கொள்ளிவாய்ப்பிசாசு ஆற்றங்கரையைத்தாண்டி நம்மிடம் வருகிறது" என்று எண்ணிவீரிட்டான். அதைக்கேட்டு குதிரை வெருண்டு ஒரேஓட்டமாய் வீட்டை நோக்கி வண்டியை இழுத்துக்கொண்டு ஒடியது. அது ஓடவே ஸ்ரீனிவாசன் பின்னும் உரத்துக்கூவ, குதிரை பின்னும் வெகு விரைவாய் அடித்துக்கொண்டு ஒடியது. இவ்வாருக ஒடி 'பங்களா'வண்டை போனதும் குதிரை நிற்க சீனிவாசன் கண்ணைத்துடைத்துக் கொண்டு இறுத்து விழித்துப்பார்க்கவே சேஷய்யரும் வைத்யனுதய்யரும் பங்களாமுன் நின்றுகொண்டு அவனை எதிர்பார்க்கக் கண்டான். கண்டதும் வண்டியைவிட்டு ஒரே குதியாய் குதித்து வைத்தியனுதய்யரைக் கட்டிக்கொண்டு அழுதான். இவ்வாறிருக்க சுப்பிரமணியன் வீட்டை நோக்கி ஒடினவன் தன் தகப்பனர் முதலியவர்களை எழுப்பிக் கூட்டிக்கொண்டுவந்து போனன். இவ்வாருக இவர்களும் "ஆட்டுமயிர் தேடிப் போனவர்கள், தாங்களே மொட்டையாய் வந்தார்களாம்" என்றபடி பிறரை பயமுறுத்தப்போய் தாங்களே பயந்து வீடுவந்தார்கள். திருடனுக்குத் தேள் கொட்டினல் இரண்டாம்பேரோடு சொல்லாதது போல்ஒவ்வொருவரும் தாம்தாம் செய்ததை மற்றவர்களிடம் சொல்லாததால் இன்றைக்கும் இவர்கள் கொள்ளிவாய்ப்பிசாசு கண்ட கதை வீரமாத்தூரில் கிழவர்கள் சொல்லக் கேட்கலாம்.

கரியமலவாயு, பிராணவாயு இவைகள்போல ஒரு வாயுவானது சதுப்புக்களில் உண்டாவதாயும் அது காற்ருேடு கலந்து தீப்பற்றி இங்கும்அங்குமாக ஒடுவதாகத் தோற்றுவதாயும் இதைத்தான் சாதாரண ஜனங்கள் கொள்ளிவாயப் பிசாசென்று சொல்லுவார்களென்றும் வைத்தியனுதய்யர் புஸ்தகத்தில் படித்திருந்தாலும் மன உறுதி இல்லாமையால் இவ்வாறு பயப்படலானர். இதுவே நம்மவர்க்குள் ஒரு பெரிய குற்றம். "ஏட்டுச்சுரைக்காய் கறிக்குதவாது" என்பது நல்ல பழமொழி. நம்மவர்கள் எவ்வளவு வாசித்தவர்களா யிருந்தாலும் புஸ்தகத்திலுள்ளதை வாசித்து மனப்பாடம் செய்து பரீக்ஷை கொடுத்து விட்டதிஞலேயே உண்மையில் படித்தவர்களாகமாட்டார்கள். "கற்கக்கசடறக் கற்பவை கற்றபின், நிற்க அதற்குத் தக" என்று சொல்லிய திருவள்ளுவர் வாக்கின் சாரத்தை இக்காலத்துப் படிப்பாளிகள் முற்று முணர்ந்து அனுசரிக்கப் பயிலவேண்டும்.

[வீரமாத்தூர்ச் சதுப்பில் கொள்ளிவாய்ப் பிசாசு கண்டதாகச் சொன்னதெல்லாம் இப்படித்தானிருக்குமோவென்று இதை வாசிப்போர் கேட்கலாம். 'கொள்ளிவாய்ப் பிசாசு' என்று சொல்வது உண்டென்று நம்மவர் மட்டுமின்றி பல தேசங்களிலு முள்ள சாதாரண ஜனங்களும் நம்மவரைப்போல் நம்பி அதைக் கண்டால் பயந்து நடு நடுங்குகிருர்கள். ஆனல் அப்படி பயப்படுகிறவர்களெல்லாம் சாமான்ய ஜனங்களே. 'கொள்ளிவாய்ப் பிசாசு' என்பது முதலில் சரியான பெயரல்ல. ஜனங்கள் பயத்தினலும் பிரமையினலும் தங்கள் கண்ணுக்குப் படும் இயல்பான ஒரு தோற்றத்தைத் தீமை செய்யத்தக்கதாக நம்பி, அவர்கள் நம்பினபடி அசற்கிட்ட சற்பனைப் பெயரே.

முதலில், 'கொள்ளிவாய்ப் பிசாசு' என்று ஜனங்கள் சொல்வது என்ன?

சேறு, சகதிநிறைந்த கதுப்புநிலம், பசும்புற்றரை இவ்விடங்களில் அபூர்வமாய்க் காணப்படும் பிரகாசமான ஒரு தோற்றத்தை சாமான்ய ஜனங்கள் கொள்ளிவாய்ப் பிசாசு என்று சொல்லுகிருர்கள்.

அந்தப் பிரகாசமான தோற்றம் எப்படி யுண்டாகிறது?

பிராணிகளின் உடல்கள் அல்லது மூலவர்க்கத்தைச் சேர்ந்த வஸ்துக்கள் அழுகிப்போவதனு லுண்டாகும் ஒருவிதக்காற்று ஆகாசத்தி லெழும்பும்பொழுது சுத்த காற்ருேடு கலந்து தானகத் தீப்பற்றி பிரகாசமாகத் தோற்றுகின்றது. அழுகிப்போன மீன்களிலிருந்து இந்தக்காற்று விசேஷமாகக் கிளம்புகிறது. நல்ல இருட்டாயிருக்கையில் சமுத்திரக்கரை யோரத்திலுள்ள ஈரமணலைக் காலாற் கிளறினல், கிளறின இடத்தில் பிரகாசமான புள்ளிகள் காணப்படுவதை நேரில் பரீக்ஷித்தறியலாம்.

இது பீயெரிபாஷணமும் ஜலவாயுவும் கலந்துள்ள ஒரு காற்று. இதற்கு இங்கிலீஷில் (Pospheric Hydrogen) என்று பெயர்.

(தீ யெரிபாஷாண மென்பது நெருப்புக்குச்சிகளின் நுனியில் கந்தகத்தோடு தோய்க்கப்பட்டிருக்கும்வஸ்துவே. நெருப்புக் குச்சியைத் தேய்க்கும் பொழுதுபளிச்சென்று தோன்றும் வஸ்து அதுவே.)

இது அபூர்வமாகத் தோற்றப்படுவது என்?

ஏனென்றால் இந்தக்காற்று மிகவும் இலேசானதும் மிக துரிதமாய்ப் பறக்கத்தக்கதுமான சுபாவமுடையது. ஆகையால் அது உண்டாக உண்டாக மிக இலேசாய்ப்பரவிக் காற்றோடு கலந்துபோகிறது. இந்தக் காற்றானது எப்போதாவது அதிகமாக உண்டாய் ஆகாசத்தி லெழும்பும்போது, இது நல்ல காற்றோடு கூடினதும் தானாய் எரியும் சுபாவமுள்ளதால் பிரகாசமான தோற்றம் காணப்படுகிறது.

கொள்ளிவாய்ப் பிசாசு என்று நாம் கிட்டப்போனால் அது ஓடுவதும், நாம் பயந்து ஓடினால் நம்மைத் தொடர்ந்து ஓடி வருவதுமாயிருப்பது என்?

ஏனென்றால், நாம் கொள்ளிவாய்ப் பிசாசை நோக்கி ஓடும்போது நாமோடுகிற வேகத்தில் நமக்கு முன்னாலுள்ள காற்றைத் தள்ளிக்கொண்டு போவதால் நமக்கு முன் ஒரு காற்றோட்ட முண்டு பண்ணுகிறோம். கொள்ளிவாய்ப் பிசாசாக நமக்குத்தோன்றும் பிரகாசமான காற்றானது அதிக லேசானதால் அந்தக் காற்றோட்டத்தில் அது நமக்கு முன்னால் தள்ளப்பட்டு ஓடுகிறது. நாம் அதன் கிட்டவிருந்து ஓடும்பொழுது நாமோடுகிற வேகத்தில் நமக்குப் பின்னாலுள்ள காற்று நம்மைத் தொடர்ந்து ஓடிவரும்படி செய்கிறோம். காற்று நம்மைத் தொடர்ந்து ஓடி வருகையில் பிரகாசத் தோற்றமுள்ள காற்றும் லேசானதால் கூடவே யோடிவருகிறது.

இந்தக்காற்றினாலன்றி வேறுவிதமாகவும் கொள்ளிவாய்ப்பிசாசுத் தோற்றம் காணுவதுண்டோ?

சில சமயங்களில் வயல்வெளிகளிலும், பசும்புல் நிறைந்த மைதானங்களிலும் மின்மினிப பூச்சிகள் போன்ற பிரகாசமுள்ள பூச்சிகள் ஏகமாகக் கூடிக்கொண்டு ஒரே கும்பலாய்ப் பறக்கும்பொழுது அதைக்கண்டு மயங்கினவர்கள் கொள்ளிவாய்ப் பிசாசு ஓடுகிறது என்று சொல்வார்கள். ஆனால் அது கொள்ளிவாய்ப் பிசாசு என்று சொல்லும் காற்றைப் போல் அதை நோக்கி ஓடினால் தூரஓடி, அதன் கிட்டவிருந்து பயந்தோடினால் துரத்திக்கொண்டு ஓடிவராது. அது கொள்ளிவாய்ப் பிசாசு ஆவது மேலே சொன்னகதையில் வைத்தியனாதய்யரும் சுப்பிரமணியனும் கொள்ளிவாய்ப் பிசாசு கண்டது போல் தான்.

மேலே சொன்ன சதுப்பு, அல்லது சேற்று நிலம் அல்லது பசும்புற்றரைகளிலன்றி மற்ற இடங்களிலும் இத்தோற்றம் காணப்படுவதுண்டோ?

உண்டு. பிணங்களை அடக்கம் செய்யும் ஸ்மசானங்களில்கீழேபுதைக்கப்பட்ட பிணங்கள் அழுகிப்போய் அவற்றிலிருந்துண்டாகும் துர்நாற்றமுள்ள காற்று சமாதிக்கல்லிடுக்குவழியாக வெளிவந்து அக்கல்லின் உச்சியில் காற்றோடு கலப்பதால் பிரகாசமாய்த்தோற்றும். இதைத்தான் இறந்தவர்கள் ஆத்துமா பிசாசு ரூபமெடுத்து கல்லறைமேல் உட்கார்ந்திருந்ததாக ஜனங்கள் சொல்லிக்கொள்வது. கொள்ளிவாய்ப் பிசாசிலுள்ள உண்மை தீ யெரிபாஷாணமும் ஜலவாயுவும் கலந்தகாற்று அழுகினவஸ்துக் களிலிருந்துண்டாய் ஆகாயத்திலுள்ள காற்றோடு கலக்கும் பொழுது ஜோதியுண்டாகிறது ஒன்றுதான். இதைப்பற்றிச் சொல்லும் மற்றக்கதைகளெல்லாம் ஜனங்கள் பீதியால் அவர் மனதுக்குத்தோன்றியதைச் சேர்த்துகட்டிவிட்ட கட்டுக்கதைகளன்றி வேறல்ல. வி. சி. ப. ர்.]

—:(※):—

## Our Story-Teller.

### Tales of a Grand Mother.

—:-:—

சிறுவர்களே, சிறுமிகளே,

எனக்கு வேலையிருந்த போதிலும், உங்களைக் கண்டு ஒரு கதை சொல்லாமல் போக மனமில்லை; மிகவும் கவனமாய்க் கேளுங்கள்.

யானை.

பகீரதி, சரஸ்வதி, கமலாம்பாள் என்ற இம் மூவரும் மதுரை ஜில்லாவைச் சேர்ந்த ஒரு கிராமத்தில் வசிக்கும் மீனாட்சியம்மாளின் பேத்தி மார்கள். மீனாட்சியம்மாள் தன் இளம் பிராயத்தில் நன்றாய்ப் படித்து கற்றுக்கொண்டமையால் இப்பொழுது தன் பேத்திமார்களுக்கு வேடிக்கையாய் புத்திமதி போதிக்க மிகவும் தகுதியானவளானாள். தினந்தோறும் மாலையில் தன் "குஞ்சுகளை" அருகாமையில் வைத்தணைத்து, அவர்களுக்கேற்ற கதைகளைச் சொல்லி, பிரதிதினமும் ஏதாவது புதிதாய் அவர்களுக்குக் கற்றுக் கொடுப்பதுண்டு. இப்

படியிருக்கையில் ஒரு நாள் மாலையில் இம் மூவரும் அக்கிராமத்தி னருகாமையிலுள்ள ஒரு தென்னந்தோப்பில் சில வழிபோக்கர்கள் தம் வாகனங்களோடு தங்கியிருக்கக் கண்டார்கள். மீனாட்சியம்மாளோ, தன் வேலைகளை முடித்து சாயந்தர வேளையானதால், குஞ்சுகளுடன் குலாவ அவர்களைத் தேடிக்கொண்டு கூடத்திற்கு வந்தாள்; அங்கு ஒருவருமில்லாததால், அவளுக்கு மனது திகீரென்றது. "இதென்னது! குழந்தைகளெங்கே போயிருக்கக் கூடும்? இருட்டும் சமயமாயிற்றே" என்று இப்படிப் பரிதபித்துக் கொண்டிருக்கும் சமயத்தில் 'அம்மா' (பேத்திகள் மீனாட்சியை அம்மா வென்றுதான் அழைப்பது வழக்கம்.) என்ற சப்தம் அவள் காதில் பட்டது. அது கமலாம்பாள் குரலென்று கண்ட மீனாட்சியம்மாளுக்கு வந்த சந்தோஷம் இவ்வளவவ்வளவல்ல.

கமலாம்பாள்:—எருமைக் கடாக்கள் எவ்வளவு பெரிது!

சரஸ்வதி:—நம்மூர் எருமைக் கடாக்கள் இவைகளுக்குப் பேரன் பேத்திகளாகும்.

பகீரதி:—இவ்வளவு பெரிது நான் கண்டதேயில்லை. இன்னுமொரு வேடிக்கை. இந்த எருமைகளுக்கு இரண்டுவால்களிருக்கின்றன!

என்றிப்படிச் சொல்லிக்கொண்டு விரைக்க விரைக்க ஓடிவந்த மூவரையும் மீனாட்சியழைத்துக் கட்டித் தழுவி முத்தமிட்டு, பகீரதியையும் சரஸ்வதியையும் பக்கத்தி லுட்கார்த்தி, கமலாம்பாளை மட்டும் மடியில் உட்கார வைத்துக் கொண்டாள்.

மீனாட்சியம்மாள்:—பக்கத்துத் தோப்பி லிருப்பவைகள் தானே.

பகீரதி:—ஆமாம், ஆமாம். மறுபடியும்பார்ப்போம் வாருங்கள். இரண்டு வால்களையும் காட்டுகிறேன்.

மீனாட்சியம்மாள்:—பகீரதி, இரண்டும் வால்களல்ல.

பாகீரதி:—நீங்கள் பார்க்கவில்லை. வாருங்கள் வாருங்கள் பார்த்தால் தெரியும்.

மீனாட்சியம்மாள்:—நான் அவைகளைப் பார்த்திருக்கிறேன். அம்மிருகங்கள் எருமைகளல்ல. அவைகளை "யானை" யென்று சொல்லுவார்கள்.

கமலாம்பாள்:—நேற்றைக்குச் சொன்ன கதையிலே அழகாபுரிராஜா யானைமேல் சவாரி செய்தான் என்று சொன்னீர்களே அதுவா?

மீனாட்சியம்மாள்:—அதுவே. முன் பின் தொங்குகிறவை இரண்டும் வால்களல்ல. பின்னிருப்பது வால். முன்னிருப்பது கை.

பகீரதி:—நமக்கு மட்டும் இரண்டு கைகளிருக்கின்றனவே. அவைகளுக்கு ஒரு கை போதுமோ?

மீனாட்சியம்மாள்:—அக் கையினால் யானை தான் நினைத்ததெல்லாம் செய்யும். இரையெடுத்துத் தின்பது அக் கையால்தான். அதினால் தண்ணீர் குடிக்கும். மரங்களை வேருடன் பிடுங்கும். ஒரு சிறு குண்டூசியையும் கீழிருந்து எடுக்கும்.

கமலாம்பாள்:—நல்ல யானையம்மா! இதுவரையிலும் நான் பார்த்ததேயில்லை. யானைக் கைபோல் எனக்கிருந்தால், நானும் 'ஓ'—வென்று சுத்தித் தண்ணீர் குடிப்பேன்

மீனாட்சியம்மாள்:—இன்றைக்கு உங்களுக்குக் கதை சொல்ல நல்லவிஷயமாப்பட்டது. கவனமாய்க் கேளுங்கள். யானைகளைப்பற்றிச் சொல்லுகிறேன்.

யானைகளைக் காட்டில் சுயேச்சையாய்த் திரிவதைக் காணலாம். காட்டிலிருக்கும் மரமட்டைகள், கிளைகள், கொடிகள், பழங்கள் முதலானவைகள் தான் அவைகளுக்கு ஆகாரம். அக்காட்டிலுள்ள குளங்குட்டைக்குப் போய்த் தண்ணீர் குடித்து தாகத்தைத் தீர்த்துக்கொள்ளும். ஓரிடத்திலிருந்து மறு இடத்திற்குப் போகவேண்டியிருந்தால், கூட்டங் கூட்டமாய்ப் போவதே வழக்கம். கிழயானைகள் முன்னிலும், நடு வயதுள்ள யானைகள் பின்னிலும், குட்டி யானைகள் நடுவிலுமா யிருப்பது வழக்கம். மத்தியான முழுவதும் காட்டிற்கு வெளியே வரப் பயந்து உள்ளேயே யிருந்து மரமட்டைகளைத் தின்று இரவில் தண்ணீர் குடிக்கக் காட்டிற்கு வெளியேயுள்ள குளத்திற்கு வருவதுண்டு. அப்படி வெளியே வரும்பொழுது முன் சொன்னபடி யானைகள் கூட்டங் கூட்டமாய் வரும். இப்படிக் கூட்டமாய் வருவதில் ஒரு ஆச்சரியம். கவனமாய்க் கேளுங்கள். ஒரு பிரயாணி ஒரு காட்டில் ஒரு குளத்தைக்கண்டு

இவ்விடம் நிச்சயம் யானைகள் தண்ணீர் குடிக்க வரும் என்று நினைத்து, தன் பரிவாரங்களை யெல்லாம் காட்டிற்கு வெளியே கூடாரமடித்துநிறுத்தி, தான்மட்டும் அக் குளத்துக் கருகாமையிலிருச்கும் ஒரு பெரியமரத்தி லேறிக்கொண்டு யானை வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். சூரியன் மறைந்து சந்திரன் பூர்ண காந்தியுடன் உதயமானான். பகல் முழுவதும் நேருக்குநேர் பேசப்பட்ட வார்த்தைகளில் சில, யானைகள் பண்ணுகிற சப்தம், சேஷ்டை முதலான வைகளால், காதுக்குக் கேளாமல் போகும். இப்பொழுதோ யானைகள் இருக்கின்றனவோ இல்லையோவென்று சந்தேகிக்க இடமுண்டாகும்படி காடு முழுவதும் நிசப்தமா யிருந்தது. மணி 8-ஆய்விட்டது. ஒன்றையும் காணோம். கொஞ்ச நேரத்திற்குப் பிறகு திடீரென்று சருப்பாக ஒன்று அவர் கண்ணுக்குத் தட்டுப்பட்டது. பிரயாணி அது ஒரு பெரிய கற்பாறையென்று நினைத்துக் குறிப்பாய்ப் பார்க்கையில், அப்பாறை நகர, வியப்படைந்து, என்ன நடக்கிறது பார்ப்போமென்று அதையே இமைகொட்டாமல் நோக்கிக்கொண்டிருந்தார். அக்கரும்பாறை தண்ணீர் குடிக்க எத்தனித்துக் காட்டிற்கு வெளியே வந்த ஒரு பெரும் யானை. அவ்யானை காட்டிற்கு வெளியே வந்து சுமார் 5-நிமிஷம் போல் அசையாமல் நின்றது. பிறகு நாலா பக்கத்திலும் திரும்பித் திரும்பிப் பார்த்து காதைப் புடைத்துக்கொண்டு அடிமேலடிவைத்து மெள்ள மெள்ள நகர ஆரம்பித்தது. இப்படியே குளம்வரைக்கும் வந்து, தண்ணீரைத தொடாமல் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொஞ்ச நேரமானவுடன், முன்போல் மெள்ள மெள்ள நகர்ந்து மறுபடியும் காடுபோய்ச் சேர்ந்தது.

சரஸ்வதி:—தண்ணீர் குடிக்காமல் ஏன் திரும்பிப் போனது?

பாகீரதி:—தண்ணீர் கலங்கி யிருந்திருக்கும் அல்லது அப்பொழுது அதற்குத் தாகமில்லாம லிருந்திருக்கும்.

கமலாம்பாள்:—அக்கா, தான்மட்டுந் தண்ணீர் குடிக்க அதற் கிஷ்டமில்லை. தண்ணீரைக் கண்ட சந்தோஷத்தில் தன் பரிவாரங்களையு மழைத்துவரப் போயிருக்கும்.

மீனாட்சியம்மாள்:—கமலாம்பாள்தான் கெட்டிக்காரி. சரியாய் ஏறக்குறைய சரியாய்ச் சொன்னாள். பின் நடந்ததைச் சொல்லுகிறேன். கவனமாய்க் கேளுங்கள்.

காட்டிலிருந்து வெளியே வரும்பொழுது முதல் முதல் எந்த விடத்தில் நின்றதோ அந்த விடத்திலேயே மறுபடியும் நின்றது. கொஞ்ச நேரத்திற்குள் ஐந்து யானைகள் வந்தன. உடனே இத் தலையானை மற்ற ஐந்துகளுடன் குளத்தின் முகமாய் மெள்ள மெள்ள நகர்ந்து ஐந்து யானைகளையும் ஐந்து இடங்களில் பாரா காக்கும்படி செய்து, தான் மறுபடி முன்போல் குளத்திற்குப் போய்த் திரும்பித் திரும்பி நாலா பக்கத்திலும் பார்த்து. 5-பாராக் காப் போர்களுச்கும் ஜாக்கிரதையா யிருங்களென்று ஆஞ்ஞையிட்டு மறுபடியும் காட்டிற்குத் திரும்பிற்று. காட்டிலிருந்து மறுபடியும் வெளியே வந்தபொழுது சுமார் நூறுயானைகள், குஞ்சுகளும் குட்டிகளுமாய் அத்தலை யானையைப் பின் பற்றிவந்தன. ஒரு ஆச்சரியம்! யானைகள் 100-கணக்கா யிருந்தபோதிலும் சிறிதும் சப்தம் செய்யாமல், பயந்து நடுங்கி ஒடுங்கிப் பதுங்கிச் சென்றன. போகிற வழியில் பாரா யானைகளும் சேர்ந்து கொண்டன. இவ்வானைக் கூட்டங்கள் நிசம்தமாய் நகருவது, தேவேந்திரனுக்குப் பயந்து ஓடுவதற்கு ஆரம்பித்த மலைகள்போ லிருந்தன. கடைசியில் சுமார் 11-மணிக்கு யானைக் கூட்டம் குளம் வந்து சேர்ந்தது. உடனே தலையானை குளத்திற்கு, முன்னேபோய், சற்றிருந்து நாலு திக்குகளையும் திரும்பிப்பார்த்து மற்ற யானைகளுக்கும் வருவதற்கு உத்தரவு கொடுததது.

கமலாம்பாள்:—யானைபேசுமோ? எப்படி உத்திரவு கொடுக்கும்?

மீனாட்சியம்மாள்:—தலையானை முன்னே போனது, அரை நாழிகைக் கப்புறம் மற்ற யானைகள் காத்திருந்து வருவது, இவைகளைப் பார்த்தால் உத்திரவு கொடுத்து நடந்ததுபோ லிருந்ததே யொழிய வேறல்ல. யானைகள் பேச, அவைகளுக்குள் ஒரு விதமான ஜாடை அல்லது பாஷையிருக்கும்.

கமலாம்பாள்:—அப்புறம் என்ன நடந்தது?

மீனாட்சி:—உடனே யானைக் கூடம் ஜலத்திலிறங்கி தாகந்தீரத் தண்ணீர்குடித்து தன்

ணீரில் மூழ்கி ஜலக்ரீடை செய்ய ஆரம்பித்தன.

இதை யெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த பிரயாணி மிகவும் ஆச்சரியப்பட்டு இப்பொழுது கொஞ்சம் சப்தம் உண்டுபண்ணிப் பார்க்கவேண்டு மென்று ஆசைப்பட்டுத் தனக்குப் பக்கத்திலிருந்த ஒரு கிளையைப் பிடுங்கிக் கீழே எறிந்தார். யானைகளெல்லாம் லத்தியைப் போட்டு வாலைச்சுருட்டிக்கொண்டு ஓட ஆரம்பித்தன.

கமலாம்பாள்:—நான் அந்த மரத்தில் இருந்திருக்கவில்லையென்று விசனப்படுகிறேன். நல்லவேடிக்கை.

மீனாட்சியம்மாள்:—குட்டி யானைகளெல்லாம் பெரும் யானைகளின் மத்தியில் பதுங்கி அரைக்ஷணத்தில் சகல யானைகளும் காட்டிற்குள் ஓடி மறைந்தன.

யானைக்குக் கண்கள் அதன் உருவத்துக்கு மிகவும் சிறிதாக இருப்பதால், சிறு சப்தத்தைக் கேட்டாலும் ஏதோ பெரிய ஆபத்து வந்துவிட்டதாக பயந்து ஓடுவதுசகஜம் என்று யானையின் சுபாவங்களை நன்ருக அறிந்தவர்கள் பிடித்திருக்கிருர்கள்.

யானை சாந்தகுணமுள்ளது; நன்றியறிவுள்ளது.

ஒரு யானை தன் மாவுத்த னிடத்திலிருந்து தப்பிக் காட்டிலுள்ள மற்ற யானைகளுடன் கூடிக் கொஞ்சகாலமான பின்பு, இம்மாவுத்தன் காட்டிற்குச் சென்று ஒரு யானைக் கூட்டத்தைப் பிடித்தான். அதில் தப்பியோடின யானையும் தற்செயலாயிருந்தது. மாவுத்தன் அதைக் கண்டு பெயரைச்சொல்லி யழைக்க, அந்த யானைமுன்போல் பணிவுடன் அவன் காலில் வந்து விழுந்தது.

யானை தந்திரமுள்ளது.

ஒருநாள் ஒரு ராஜா ஒரு சிறு யானையைப் பிடித்து அதைக் கயிற்ருல் கட்டி மிக்க சிரமத்துடன் இழுத்துக்கொண்டு வந்தான். அவ்யானை திடீரென்று செத்ததுபோல் கீழே விழுந்தது. உடனே ராஜா கயிற்றை யெல்லாம அவிழ்த்துச் செத்ததென்றெண்ணித் திரும்பினான். ராஜா கொஞ்சதூரம் சென்றவுடனே, இக்கள்ள யானை குபீரென் றெழுந்து ஓ வென்று சத்தமிட்டுக் கொண்டோடிக் காட்டிற்குள் போய்மறைந்தது.

யானை வைராக்கியமுள்ளது.

வெயிற்காலத்தி லொருநாள் இரண்டு யானைகள் (அதிலொன்றுபெரிது: மற்ருென்று சிறிது) ஒரு கிணற்றண்டை தண்ணீர்குடிக்க வந்தன. சிறுயானை அதன் சௌகரியத்தின் பொருட்டுக்கையில் ஒரு தொட்டியை யெடுத்து வந்தது; பெரும் யானை, இதைப் பொறுக்காமல், லபக்கென்று அத்தொட்டியைச் சிறுயானையிடத்திலிருந்து பிடுங்கித் தான் தண்ணீர் குடிக்க ஆரம்பித்தது. சிறு யானைக்கோ வந்த கோபம் இவ்வளவவ்வளவல்ல. தண்ணீர் குடிக்கும் யானைக்குத் தெரியாமல அதன் பின் வந்து திடீரென்று ஒருமுட்டு முட்டி அதைக் கிணற்றில் தள்ளிவிட்டது. பிறகு தள்ளுபட்ட யானை சர்க்காரால் மிகவும் வருத்தத்துடன் கிணற்றிலிருந்து எடுக்கப்பட்டது.

கமலாம்பாள்:—யானைக் கதை நன்ருயிருக்கிறது.

மீனாட்சி:—இன்று கதை சொன்னது போதும். சாப்பிட்டுவிட்டுப் படுத்துக் கோள்ளுங்கள். நாளையதினம் ஆளுக்கொரு கதை எழுதி என்னிடத்தில் காட்டுங்கள்.

கமலாம்பாள்.
சரஸ்வதி. } அப்படியே.
பாகிரதி.

சிறுவர்களே, சிறுமிகளே,

இப்பொழுது உங்களுக்கு யானையைப்பற்றிப் பொதுவாய்ச் சில விஷயங்களும், சில கதைகளும் தெரியும். இதுபற்றி விஸ்தாரமாய் அறிந்து கொள்ளுவதற்கு இக்கதைகள் உங்களுக்கு ஆசை மூட்டுமென்று நம்புகிறேன்.

உங்கள் அன்புள்ள,
ராமய்யா.

## Kindergarten.

## பால பிருந்தாவனம்.



ஆனை யானை, அரசரானை,
அழகரும் சொக்கரும் ஏறும் யானை,
கட்டுக் கரும்பை முறிக்கும் யானை,
கடைவீதி யெல்லாம் சுற்றும் யானை,
குட்டி யானைக்குக் கொம்பு முளைத்தது,
பட்டண மெல்லாம் பார்க்க வாருங்கோ!

———:(‡):———

## Some thoughts on Vernacular study and Composition.

—(:-:)—

SIR,—My attention having been drawn to the correspondence on the subject now appearing in the columns of the *Hindu*, I desire to make a few observations on the subject in your columns, with your permission. I have in a series of articles contributed to newspapers and reprinted in a pamphlet form discussed the question of Vernacular studies in Madras. It was published in 1898 and though fifteen years have now elapsed and we see a number of books, good, bad and indifferent, advertised by a number of concerns, the defects then pointed out remain more or less the same. Without recapitulating them here, I may refer to the remedies which I then suggested. The first and the most salient point to keep in mind is: "The work of educating the masses is such a large one that it could not be satisfactorily performed either by the Government or the educated classes working alone. It is a gigantic work which would absorb all the energies and resources of both the Government and the educated class; and, therefore, what little of these, either of them could bring to it should be utilised in a cordial spirit of mutual help and co-operation, so that as little of the energies and resources employed for the purpose may be wasted as possible."

I then said that "the Government should so arrange the system of education that it imparts in schools, especially in the Primary and Lower Secondary Departments, as to give a good grounding in the vernacular to the young student who goes up to the Upper Secondary Department and create in him a taste for his native language." This is far from being done yet, though there has been much reform or overhauling of the system of school-education To repeat what I said 15 years ago, "a reform in the system of Primary and Lower Secondary education is more urgently called for, in the interests of the vernaculars,' than anything else. The principle of *discrimination* is stil. wanting in many of those who appear as the accredited representatives of "schemes" for the improvement of vernacular studies and composition.

"In speaking of popular Vernacular literature" I wrote in 1898, "care should be taken to discriminate between a healthy growth of that literature and a *production* of it. Healthy growth implies production and distribution. Production without distribution, will be mere accumulation and not real growth. The present decay of the vernaculars is due as much to the want of good literary activity (as distinguished from the mere book-making proclivity which is now in evidence to some extent) among the educated classes as to the absence of a healthy taste for reading among the literate portion of the people. Our aim in any attempt at reform should be to provide for the supply of both these wants. A good grounding in the Vernacular and the creation of a real taste for the same in the early days of school life is absolutely essential for the success of any reform that aims at the improvement of the vernaculars as a medium for the diffusion of useful knowledge among the mass of the people. I have personally known cases of youngmen who have acquired a taste for their Vernacular in early boyhood but who have taken to the study of Sanskrit from the fourth form upward, having kept touch with their mother-tongue, owing to the early taste imbibed, to such an extent as to be able to wield it with much greater force and ease in the diffusion of useful knowledge on subjects they have themselves studied, than most of the graduates who have carried their vernacular studies up to the B. A, degree Examination". My views thus expressed 15 years ago, I see no reason to change in spite of the multiplication of books which I see and welcome as a sign of the times but which is not yet sufficiently developed to form a sign of "healthy growth". For, most of the young writers are poor in thought and poorer in the method of giving expression to what little they are able to think.

"Language is the slave of thought" and only a cultured mind that can well control the process of thinking and use it according to its own enlightened will", can command that "facility of expression" which is really at the bottom of what we term "literary style".

Most of our educated men who have essayed hard to produce a "book" in the vernacular with rare exceptions, have shown themselves to be poor thinkers and most of the young men who take to the "making of books" as a makeshift are no thinkers at all. It is the facility and apitude of expression as well as its amplitude when language is used as a vehicle for the expression of thought and emotion as well as mental pictures formed of "things perceived" by the apperceiving mind that really go to the making of *literature* in any language and judged by this standard our current literature is woefully poor and not worth the name. It is only *thinkers* that can find fitting expressions for the thoughts they think and not traffickers in borrowed thoughts.

C. V. SWAMINATHA AIYAR.

*—The Hindu of 23rd July 1913.*

## Appeal for Co-operation.

*From the Hindu of July 28th 1913.*

SIR.—In thanking you for promptly publishing my first few thoughts on the subject, I beg leave to point out that it is a most important work and is of such a nature that we cannot afford to dally with it as some people seem inclined to do. In concluding the third of my series of articles (1898) in which I took a brief survey of the question of vernacular studies as affecting the education and enlightenment of the masses, I laid stress on the necessity of "real hard work" as opposed to "paper schemes" merely for reclaiming the wild waste of popular ignorance. Now, as I said before, "I do not mean to minimise the importance of "schemes", as facilitating the production of maximum results with minimum waste of energy and labour; but I feel that we are relying too much on "Schemes" for results, while doing too little of work to achieve them."

In this view I was heartily supported by almost all the prominent educationists of the time, and Dr. Duncan and Mrs. Brander, as well as many others, helped me with their ready sympathy and valuable advice in the carrying out of my work. Among those who took a kindly interest in my efforts and encouraged me in my work was the late Rao Bahadur M. G. Ranade, then a Judge of the Bombay High Court. Writing to me at the time on the subject he remarked: "I have read these articles with great interest. . . . . With much you have written I entirely agree. *Earnest work is what is wanted*, but in this matter as in others, there is room for all workers and I should myself not come in the way of any experiment being tried from various quarters." (The italics are mine.) Writing later on, after reading a leader which appeared in the newspaper which published these articles, he wrote to me to say that "the leader" in its issue of 9th September, "makes the suggestion which you have practically carried out. You will have to be disappointed of the result of that experiment but as I have already written to you such disappointments are inevitable. You should make another experiment under more favourable circumstances. I feel sure you will succeed."

As I went on working and spending myself almost single handed, taking up the question of village sanitation for some time, I found my health break down, and before I could recover my shattered health, misfortunes came to me in battalions, so to say, and laid me low, striking me as an English friend said "the heaviest of blows that could befall a man." I have again returned to my "old love"—the encouragement of vernacular study and composition. The well-conceived organisation of 'Association of Helpers' which was more or less in working order all through the villages, unobtrusively working to create a taste for general reading with "reading circles" in almost every village where there was a well-established school, public or private, hath fallen into desuetude. But the spirit is there and still working and I shall be glad to have the co-operation of all good men and true in my self-imposed task. I have grown old but with age hath come wisdom while my heart is yet quite young and tender like that of a child. With this my new resolve hath come a new life to the *Viveka chintamani* which after 21 years of approved service is now transformed again into a Boy's Journal conducted by boys for the use of young-folk in which term I include all those who have not lost their young hearts and the buoyancy of spirit which it ever conveys.

C. V. SWAMINATHA IYER.